


டீவி

ஸ்தாபிதம் 1989

# திரு.வி.க. நகர் பெனிஃபிட் ஃபண்டு லிமிடெட்


தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை - 600 082. போன் : 5378690

பாரீஸ் கிளை : 8/2, ஸ்டீரிங்கர்ஸ் தெரு, சென்னை - 600 108. போன் : 565760

தி. நகர் கிளை : 20, ரங்கநாதன் தெரு, சென்னை - 600 017. போன் : 4344324

அண்ணா நகர் கிளை : AC-38, 4வது தெரு, KHM ஆஸ்பத்திரி பின்புறம், அண்ணா நகர், சென்னை-40.




**பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள்**

## எக்செல் பாண்டு - A திட்டம்

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## எக்செல் பாண்டு - B திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | ரூ. 13,648 |

## திருமூர்த்தி பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 20,000 | 5 ஆண்டு | ரூ. 60,000 |

## வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு | 18% |
| | 2 ஆண்டு | 19% |
| | 3 ஆண்டு | 20% |
| | 4 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## வசந்தம் பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 7,000 | 40 மாதம் | ரூ. 14,000 |

## மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 12 மாதம் | 1,195 |
| | 24 மாதம் | 1,455 |
| | 36 மாதம் | 1,810 |
| | 42 மாதம் | 2,000 |

## பென்ஷனர் வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | 21% |

★ பென்ஷனர், ஓய்வு பெற்றோர், முதியோர் (50 வயதிற்கு மேல்), விதவைகள், ஊனமுற்றோர் இத்திட்டத்தின் கீழ் பயன்பெறலாம்.

★ பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்.

★ சேமிப்பு திட்டம் 12% வட்டி நாள் கணக்கில் வட்டி கணக்கிடப்படும்.

★ தங்க நகைகள் பேரில் ஒரு சவரனுக்கு ரூ. 2400 வரை கடன் வழங்கப்படும். மாத வட்டி 2%.

★ சென்னை மாநகர வீடு/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும். குறைந்த வட்டி. கடன் மிக விரைவாக வழங்கப்படும்.

★ பங்குதாரர்களுக்கு மட்டும்

★ ரூ.10 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

## பென்ஷனர் மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு | 6,157 |
| | 2 ஆண்டு | 7,582 |
| | 3 ஆண்டு | 9,337 |
| | 40 மாதம் | 10,000 |

## வேலை நேரம்

தலைமை அலுவலகம் : 9 முதல் 5. ஞாயிறு 9 முதல் 1

கிளைகள் : 10 முதல் 5. ஞாயிறு 10 முதல் 1

உணவு இடைவேளை இல்லை. செவ்வாய் விடுமுறை.

# ஜோக்ஸ் : நோய் விட்டுப் போகும்!


















- அகில்

# ஆன்மிக உணர்வு இல்லாமலே ஆத்ம திருப்தி பெறமுடியும்...!



• எஸ்.பி.பி.



• கே.பி.



• சிவாஜி



• நாகேஷ்



• செம்மங்குடி

**கர்நாடக இசைக் கலைஞராவதற்குக் 'காதோர நரை' கட்டாயத் தகுதியாக இருந்த காலம் ஒன்று உண்டு. இன்று நிலைமை வேறு. இருபது முதல் முப்பது வயதுக்குட்பட்ட கர்நாடக இசைக் கலைஞர்களின் பட்டியல் நீண்டுகொண்டே வருகிறது. ஆரோக்கியமான, தொழில்ரீதியான அணுகுமுறையுடன் இத்துறையில் பிரகாசிக்கும் இளைஞர்களுள் முக்கியமானவர் விஜய் சிவா. வயது 29. ஒரு வெள்ளி விழாக் காலமாக மேடையில் பாடி வருகிறார்! இளம் கர்நாடக இசைக் கலைஞர்களை ஒருங்கிணைப்பதில் விஜய் சிவா எடுத்துக் கொண்ட முயற்சிகள் எந்தத் துறையினருக்கும் வழிகாட்டலாக அமையக்கூடியவை. அவருடன் ஒரு சந்திப்பு...**

''உங்களைப் போன்ற இளைஞர்கள் இன்று இசை மேடைகளை வலுவாக ஆக்கிரமித்திருப்பதற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்...?''

" 'இது இளைஞர் யுகம்' என்று சொல்லும் அளவுக்குப் பல துறைகளில் இளைய தலைமுறையினர் இன்று தடம் பதித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் போக்கினை ஒட்டியே இசை மேடைகளிலும் இன்று இளைஞர்களைப் பார்க்கிறோம். இன்னும் பத்து வருடங்களுக்காவது இது ஓர் இயக்கம் போல் தொடரும். இளைஞர்களின் ஆற்றல், முயற்சி தவிர வேறு சில காரணங்களும் இந்த இயக்கத்துக்கு உதவியிருக்கின்றன. எந்த கலைத்துறையிலுமே ஏற்படக்கூடிய ஒரு தற்காலிகத் தொய்வு இந்தத் துறையிலும் ஏற்பட்டது. எஸ். பாலசந்தர், எம்.எல்.வி, டி.கே. ஜெயராமன், மகாராஜபுரம் சந்தானம் என்று அடுத்தடுத்து பெரிய வித்வான்கள் காலமானார்கள். இதே காலகட்டத்தில் முதுபெரும் கலைஞர்களான எம்.எஸ்., செம்மங்குடி, டி.கே. பட்டம்மாள் போன்றவர்கள் கச்சேரிகள் செய்வதைக் குறைத்துக் கொண்டிருந்தார்கள். இவர்களுடைய வாய்ப்புகளெல்லாம் இளைஞர்களுக்குக் கிடைத்தன. உயர்மட்டத்திலிருந்து அதிக போட்டியில்லாததால் சட்டென்று இளைஞர்களால் வேரூன்ற முடிந்தது."

''இதே காலகட்டத்தில்தான் உங்கள் Youth Association for Classical Music (YACM) தொடங்கப்பட்டது, இல்லையா...?''

''ஆமாம். தற்செயலாகத்தான் அப்படி அமைந்தது. விவேகானந்தா கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது நாங்கள் இன்டர்-

# இசை உலகம்

• எம்.எஸ். • டி.கே. பட்டம்மாள் • கே.வி.என்.

காலிஜியேட் போட்டிகளுக்குப் போய், கர்நாடக இசைப் பிரிவில் பங்கேற்போம். அந்த நிகழ்ச்சிகளுக்கு மாணவர் கூட்டம் நிறைய வரும். நன்றாக ரசிப்பார்கள். 'அவர்களுக்கு இவ்வளவு ஆர்வமா...?' என்று ஆச்சரியமாக இருந்தது. இளைஞர்கள் பாடுவதால் பிற இளைஞர்கள் ஈர்க்கப்படுகிறார்கள் என்று ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. ஒரு முறை நண்பனும் வயலின் கலைஞனுமான ஸ்ரீராம்குமாருடன் 12-B பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்தபோது திடீரென்று என் யோசனையை வெளிப்படுத்தினேன் : 'இளம் வித்வான்களை ஒருங்கிணைக்க ஓர் அமைப்பு ஆரம்பித்தால் என்ன...?' என்று கேட்டேன். 'அட! நானும் அதே ரீதியில்தான் யோசித்துக் கொண்டிருந்தேன்...' என்றான் அவன். வேறு பல இளம் கலைஞர்களிடம் பேசிப் பார்த்தபோது எல்லோருக்குமே மனத்தில் அப்படியொரு எண்ணம் இருப்பது தெரிந்தது. 1985 ஆகஸ்ட் ஐந்தாம் தேதி, YACM அமைப்பைத் தொடங்கினோம். முப்பது வயதுக்குட்பட்ட இசைக் கலைஞர்கள் ஒருங்கிணைந்தோம். சென்னையிலும் வெளியூர்களிலும் உள்ள அத்தனை சபாக்களுடனும் தொடர்பு வைத்துக் கொண்டு, இளம் கலைஞர்களுக்குத் தகுதி அடிப்படையில் வாய்ப்புக் கிடைக்க வழிசெய்தது ஒய்.ஏ.சி.எம். பிற சபாக்களுடன் இணைந்தும் தனியாகவும் அவர்களுக்கு வாய்ப்புக்களை உருவாக்கிக் கொடுத்தது. இளைஞர்கள் தங்கள் பயோடேட்டாவைத் தூக்கிக் கொண்டு போய் சபாக்களில் வாய்ப்புக் கேட்கும் சங்கடம் தவிர்க்கப்பட்டது."

"சபாக்கள், உங்களுடைய அமைப்பின் சிபாரிசுகளை எப்படி ஏற்றன? 'சின்ன பையன்கள்' என்று ஒதுக்கி விடவில்லையா...?"

"எங்கள் முயற்சி நீடித்து நிலைக்காது என்றே ஆரம்பித்த புதிதில் எல்லோரும் நினைத்தார்கள். முக்கியமான சபா தலைவர்கள், செயலாளர்கள் போன்றவர்களை அழைத்து எங்கள் முயற்சியை ஆதரித்து ஆலோசனை வழங்கச் சொல்லிக் கேட்டோம். அவர்களையும் ஈடுபடுத்தியதால் நாங்கள் எதிர்த்துப் போராடும் நோக்குடன் இந்த அமைப்பைத் தொடங்கவில்லை என்பதைப் புரிந்து கொண்டார்கள். பல மூத்தவர்கள் சிறந்த யோசனைகள் கொடுத்தார்கள் - ஏற்றுக் கொண்டோம். வேறு சிலர் கொடுத்த தவறான யோசனைகளை ஒதுக்கினோம். நாங்கள் நடுநிலைமையுடன் செயல்படுவோம் என்பது எல்லோருக்கும் புரிந்து விட்டது. மேலும், ஒய்.ஏ.சி.எம். தொடங்கவும் அதன் ஆதரவில் கச்சேரிகள்

• விஜய் சிவா

" மார்க்கெட் உள்ளபோது சம்பாதித்துக் கொள்ளும் கட்டாயம் இருக்கத்தான் செய்கிறது.... "



• நான்கு வயதில்....

நடத்தவும் தனியார் நிறுவனங்களிடம்தான் ஸ்பான்ஸர்ஷிப் பெற்றோம். முதன் முதலாக ஸ்பான்ஸர்ஷிப் முறையை அறிமுகப்படுத்தியதே ஒய்.ஏ.சி.எம்.தான். பெரிய நிறுவனங்கள் அளித்த அங்கீகாரம் எங்களுக்கு ஓர் அந்தஸ்தைக் கொடுத்தது. எல்லா சபாக்களும் இளைஞர்களுக்காகத் தனியாக இசை விழா நடத்த முன்வந்தன. ஐந்து ஆண்டுகளில் இளைஞர்களின் ஆக்கிரமிப்பு அதிகமாகி விட்டது. ஆனால் பாருங்கள்... இளைஞர்கள் கச்சேரி செய்தால் இளம் ரசிகர்கள் கேட்க வருவார்கள் என்ற எங்கள் எதிர்பார்ப்பு மட்டும் நிறைவேறவில்லை... அதனால் ஒரு புதிய தீர்மானம் நிறைவேற்றி ஒய்.ஏ.சி.எம்மின் பிரதான நோக்கத்தையே மாற்றினோம். இளம் ரசிகர்களை உருவாக்குவதே இப்போது முதன்மை நோக்கம். அதிலும் பல தோல்விகளைத்தான் முதலில் சந்தித்தோம். இப்போது பள்ளி மாணவர்களை மூன்று கச்சேரிகள் கேட்கச் செய்து, அந்த கச்சேரிகளின் அடிப்படையில் பள்ளிகளிடையே வினாடி வினா நடத்தி, முதல் பரிசாக 1500 ரூபாய் கொடுக்கிறோம்..."

"கரும்பு தின்ன கூலி மாதிரிதான்..."

"ஆமாம். ஆனால் அதற்குத்தான் ஓரளவு பலன் கிடைத்துள்ளது."

"இளம் வயதிலேயே இசையைத் தொழிலாகக் கொள்ள முடிவு செய்யும் இளைஞர்கள் இதில் மனநிறைவு அதிகம் இருப்பதாகச் சொல்கிறார்கள். மனநிறைவுக்குக் காரணம் இந்தக் கலையின் ஆன்மிகப் பின்னணியா?"

"குறைவான டென்ஷன்; கேட்பவர் இசைப்பவர் இருவருக்குமே மனமகிழ்ச்சி, வேரூன்றி விட்டால் நல்ல வருமானம் என்று பல காரணங்கள் இருக்கின்றன. ஆத்ம திருப்தி ஏற்படுவதற்கு ஆன்மிக ஈடுபாடு இருக்க வேண்டிய கட்டாய மில்லை..."

"இதை ஒரு வீம்புக்காகச் சொல்கிறீர்களா? அல்லது 'ஆன்மிகப் பின்னணியை வலியுறுத்தினால் இளைஞர்கள் பயந்து ஒதுங்கி விடுவார்கள் என்பதற்காக இப்படிச் சொல்கிறீர்களா...?"

"வீம்புக்காகச் சொல்லவில்லை. ஆனால் இளைஞர்கள் இந்த ஆன்மிகப் பின்னணியைக் கண்டு ஒதுங்கக்கூடும் என்ற காரணம் ஓரளவு இப்படிப் பேச வைக்கிறது..."

"தனிப்பட்ட முறையில் உங்கள் நம்பிக்கை என்ன...?"

"எனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டு. அந்த நம்பிக்கை கர்நாடக இசையைக் கூடுதலாக அனுபவிக்க உதவும் என்றும் நம்புகிறேன். ஆனால் அவ்வாறு நம்பாதவர்களும் சிறந்த இசைக் கலைஞர்களாக இருக்க முடியும்."

"அப்படியானால், சாகித்ய பாவம் என்பது என்ன? நம்பிக்கை இல்லாமலே, 'தெய்வம் உண்டென்று உறுதிகொள்வாய் மனமே...' என்று உருகிப் பாடுவதெல்லாம் வெறும் நடிப்பா?"

"இல்லை! வார்த்தைகள் இல்லாமல் வெறும் ராக ஆலாபனை செய்யும்போது பாடுபவரின் மனம் அதில் ஒன்றி உருகவில்லையா...? அதே போல் பாடலை, கீர்த்தனையைப் பாடும் போதும் அதன் இசை வடிவத்தில் - கலை வடிவத்தில் - ஒன்றிப் பாட முடியும்.... 'கடவுள் பக்தி இல்லாவிட்டாலும் கலையிடம் - இசையிடம் பக்தி இருப்பது அவசியம்' (Not bhakti towards the godhead but towards music itself...) என்று செம்மங்குடி அவர்கள் கூட சமீபத்திய பேட்டி ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்."

"இசையைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு, சினிமா துறையினரைப் போல் மார்க்கெட் உள்ளபோதே சம்பாதித்துக் கொள்ளும் கட்டாயம் இருக்கிறதா?"

"சினிமா துறையின் பிரும்மாண்ட ஏற்ற - இறக்கம் இந்தத் துறையில் இல்லாவிட்டாலும் மார்க்கெட் உள்ள போது சம்பாதித்துக் கொள்ளும் கட்டாயம் இருக்கத்தான் செய்கிறது. சினிமாவில் நின்று நிலைத்திருக்கும் கே.பி., எஸ்.பி.பி., சிவாஜி, நாகேஷ் போன்றவர்களை எடுத்துக் கொள்ளுங்கள். வாய்ப்பு இல்லாமல் போனாலும் நீண்ட இடைவெளிகளைத் தாக்குப்பிடித்து இவர்கள் மீண்டும் பிரகாசிக்க முடியும். இசைத் துறையிலும் இவர்களைப் போன்ற ஜாம்பவான்கள் உண்டு. செம்மங்குடி, எம்.எஸ், டி.கே. பட்டம்மாள், கே.வி. நாராயணசாமி.. இவர்களைப் போல் உழைத்து தங்களை நிலைப்படுத்திக் கொண்டவர்கள் 'மார்க்கெட்' நிலவரம் பற்றிக் கவலைப்பட வேண்டாம். மற்றவர்கள் காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளத்தான் வேண்டும்."

"சரி, ஓரளவுக்கு மார்க்கெட் நிலைத்து விட்டது என்று கருதும் இளைஞர்கள் தங்கள்


இந்த 75 ml அளவுள்ள
காலி பாட்டிலில் சுத்தமான
தண்ணீரை பிடித்து
கொள்ளுங்கள்.
உங்களுக்கு ஒரு பாட்டிலுக்கு ரூ. 2.75 லாபம்?
3 பாட்டிலுக்கு ரூ. 8.75 லாபம் ?
விபரம் 62-ம் பக்கம் பார்க்கவும்.

## ‘சுருக்-நறுக்’ என்றொரு சொல்லோவியம் – 26

### வாழ்க்கை என்பது.....

**‘Life is a tale told by an idiot’ என்று ஷேக்ஸ்பியர் எழுதியதை சமீபத்தில் கல்பநாத்ராய் கூட மேற்கோள் காட்டிப் பேசி இருக்கிறார். அவர் சூழ்நிலை அப்படி. ஆனால் வாழ்க்கை என்பது ஒரு காஸ்ட்லியான வாத்தியார். அனுபவ நெருப்பில் நம்மைப் புடம் போட்டுப் பார்க்கிற உயர்தரமான பொற்கொல்லன்.**

**உங்களுக்கு என்ன தோன்றுகிறது? வாழ்க்கையை ஒரு வரியில் படமெடுத்துக் கண்முன் நிறுத்துங்கள் பார்க்கலாம்!**

**சிறந்த சொல்லோவியங்களுக்கு வழக்கம் போல் ரூ. 50 பரிசு. இந்த வாரத்துடன் இப் போட்டி நிறைவடைகிறது. அதிக சொல்லோவியங்கள் பிரசுரம் கண்டவர் உங்களில் யார்? கண்ணைப் பறிக்கும் டைட்டன் கடிகாரங்கள் யாருக்குக் கிடைக்கப் போகின்றன?**

**கொஞ்சம் காத்திருங்கள்.**

**முடிவு தேதி 15.4.96க்குள் கூப்பனை நிரப்பி அனுப்பி விடுங்கள்.**

**ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

**– ஆர்.**

வாழ்க்கை என்பது ..........................................................
..........................................................................
..........................................................................
..........................................................................
..........................................................................

பெயர் : ..................................................................
முகவரி : ................................................................
..........................................................................
..........................................................................
..........................................................................

‘ரேட்டை’ உயர்த்தச் சொல்லிக் கேட்டால் சபாக்கள் ஏற்றுக் கொள்கின்றனவா...?”

“அனேகமாக எல்லோருமே ஏமாற்றத்துடன்தான் ஏற்பார்கள்; அல்லது அதே அளவு ஏமாற்றத்துடன் மறுப்பார்கள்!”

“இவ்வளவு போட்டியிருக்கும் போது இளம் கலைஞர்களிடையே உறவு எப்படி இருக்கிறது? ஒருவரையொருவர் விட்டுக் கொடுக்காமல் இருக்கிறீர்களா?”

“போட்டிக்கு இடையேயும் நல்ல ஒட்டுறவு இருக்கிறது. காரணம், அனேகமாக சக கலைஞர்கள் எல்லோரும் குடும்ப நண்பர்கள். சிறந்த கல்விப் பின்னணி உடையவர்கள். எங்களுக்கு குருவாக இருந்த எஸ். ராமநாதன், டி.கே. ஜெயராமன், எம்.எல்.வி. போன்றவர்கள் பிறருடைய சிஷ்யர்களின் கச்சேரிக்குப் போவார்கள். எஸ். ராமநாதனின் சிஷ்யையான செளம்யா பாடினால் எனது குரு டி.கே.ஜே. போய்க் கேட்பார் – அந்த கச்சேரியின் உயர்வுகளை என்னிடம் எடுத்துச் சொல்லுவார். பெற்றோரும் அப்படியே. ஒருமுறை ராஜ்குமார் பாரதியின் கச்சேரிக்குப் போகாமல் அதே நாளில் நடந்த என் கச்சேரிக்கு வந்திருந்தார் அவர் அம்மா. இதெல்லாம் ஆரோக்கியமான சூழலுக்கு உதவுகிறது.”

“இளம் வயதிலேயே மேடைப் பாடகராகி விடுவதால் கலையில் முதிர்ச்சியின் பயனான முழுமையில்லை; புதியவை கற்க நேரமில்லை... என்றெல்லாம் கடுமையான விமர்சனங்கள் எழுவது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?”

“இப்படிப் பொதுப்படையாக விமர்சனம் செய்யக் கூடாது!”

“சுதா ரகுநாதன் கூட, ‘இன்னும் பத்து வருடங்கள் கழித்து மேடையேறியிருக்கலாமோ’ என்று ஒரு சந்தர்ப்பத்தில் பேசியிருக்கிறார்...”

“சுதா, தன்னடக்கம் காரணமாக அப்படிப் பேசியிருக்கலாம். ஆழமில்லாமல் பாடும் சுமாரான (mediocre) கலைஞர்கள் எந்த காலகட்டத்திலும் எந்த வயதினரிடையேயும் உண்டு... அவர்களை அடிப்படையாக்கிப் பொது விமர்சனம் செய்யக் கூடாது.”

“சரி, உங்களைப் பற்றிச் சொல்லுங்கள். நான்கு வயதிலிருந்து கச்சேரி செய்கிறீர்கள். இந்தத் துறையில் நீடித்து நிலைத்திருக்க என்ன முயற்சிகள் எடுத்துக் கொள்கிறீர்கள்....?”

“எதைச் செய்தாலும் மனப்பூர்வமாகவும் கச்சிதமாகவும் செய்ய வேண்டும் என்ற முனைப்பைத் தவிர வேறு சிறப்பு முயற்சி கிடையாது...”

“சில ஆண்டுகளுக்கு முன் மியூசிக் அகடமியின் நிரம்பிய அரங்கில் பாடிய போதும் சரி சமீபத்தில் அதிக விளம்பரமில்லாத ஒரு கச்சேரியில் விரல் விட்டு எண்ணக்கூடிய அளவு ரசிகர்களே இருந்தபோதும் சரி... ஒரே




மாதிரியான மாறாத உற்சாகத்துடன் பாடியது எப்படி...?"

"வேறுவிதமாக நான் எப்படிப் பாட முடியும்...? மேடை ஏறிவிட்டால் அவ்வாறு உற்சாகமாகப் பாட வேண்டும் என்பதற்கு மேலாக வேறெதுவும் தோன்றாது."

"இந்த மனோநிலை உருவாக என்ன காரணம்? உங்கள் சிந்தனையை வாழ்க்கையைப் பாதித்தவர்கள் யார்? அல்லது எது?"

"நிறைய பேர் பாதித்திருக்கிறார்கள். வீணை பாலசந்தருடன் பேசிப் பழகிய சந்தர்ப்பங்களில் தொழில்ரீதியான அணுகுமுறையை அறிந்து கொண்டேன்; உழைப்புக்கு உதாரணமாக நான் கொண்டவர் உமையாள்புரம் சிவராமன்... விவேகானந்தரின் அத்தனை பேச்சு - எழுத்துக்களையும் படித்திருக்கிறேன். அவை பெரிய அளவில் பாதித்தன. அப்புறம்... குரு டி.கே. ஜெயராமன். அவர் என்னை ஒரு கலைஞனாகவே நடத்தினார். ஒரு உதாரணம் சொல்ல வேண்டுமென்றால், 'சுவாதித் திருநாள் கீர்த்தனைகள்' என அவர் ஒப்புக் கொண்டவற்றை நான் அவ்வாறு ஏற்றதில்லை. அந்த சர்ச்சை எழுந்தபோது நான் நடுநிலை வகித்தேன். ஆனால், என் பாடல் பட்டியலில் (ஒவ்வொரு கச்சேரியின் போதும் பாடல் பட்டியல் அச்சடித்து ரசிகர்களுக்கு விநியோகிக்கிறார் விஜய்சிவா) சுவாதித் திருநாள் என்று வெளியிட வேண்டும் என அவர் ஒருநாளும் கட்டாயப்படுத்தியதில்லை.... சுவாதித் திருநாள் விழாக்களில் அவர் பாடினால் என்னை உடன் பாடுவதற்கு வரச் சொல்லிக் கூப்பிட மாட்டார்... இவ்வாறு என் தனிப்பட்ட எண்ணங்களை மதித்ததால் என் பொறுப்பும் பன்மடங்கு அதிகமாயிற்று."

"ரசிகர்கள் மிகவும் உணர்ச்சிவசப்பட்டுப் போகும் வகையில் உங்களைப் போன்ற கலைஞர்களால் உருக்கமாகப் பாட முடிகிறது. இவ்வளவு உணர்ச்சிகளைத் தேக்கிப் பாடும் போதும் நீங்கள் உணர்ச்சிவசப்படாமல் இருக்க முடிவதன் ரகசியம் என்ன...?"

"வாய்ப்பாட்டு என்பது ஒரு 'மினி' பிராணாயாமத்தை உள்ளடக்கிய யோகப் பயிற்சி. உட்காரும் நிலை, நாபியைப் பயன்படுத்தி ஒலி வெளிப்படுத்துவது, எல்லாமே உடல்-மன சம நிலைக்கு உதவும் விஷயங்கள். இதனால் பாடும் போது உணர்ச்சிகளைக் கட்டுக்குள் வைத்திருக்க முடிகிறது. தப்பித் தவறி சற்றே உணர்ச்சிவசப்பட்டாலும் தொடர்ந்து பாடுவதன் மூலம் மீண்டும் கட்டுக்குள் வந்துவிட முடிகிறது. சுவாமி சின்மயானந்தாவின் தியானப் பயிற்சி முறையைப் பழக முயன்ற போது, 'அட, பாடும் போதும் இதைத்தானே செய்கிறேன்' என சட்டென்று உணர்ந்தேன்."

"வாழ்க்கையில் சீக்கிரமே பெயரும் புகழும் பெற எதையாவது விலையாகக் கொடுக்க வேண்டியிருந்திருக்குமே...?"

"எதையும் நான் விலையாகக் கொடுக்கவில்லை. எந்த இழப்பும் எனக்கு இல்லை..."

"அடிக்கடி பயணம் செய்வது சலிப்பூட்டவில்லையா?"

"நான் தனிமை விரும்பி என்பதால் பயணமும் இடமாற்றமும் எனக்கு அவ்வளவாக ரசிக்கவில்லை. ஆனால் அதைவிட கசப்பான விஷயங்கள் சிலவும் இருக்கின்றன. கச்சேரி ஏற்பாடு செய்பவர்கள் சிலர், மது அருந்தத் தூண்டுவது; மறுத்தால் 'உன்னிலும் மூத்தவர்கள் என்னுடன் குடித்திருக்கிறார்கள்; நீ ஏன் மறுக்கிறாய்?' என்று வாதாடுவது... இப்படி பல விஷயங்கள்... தொழிலையே பாதிக்கக்கூடிய சிக்கல்கள்... நான் மட்டுமல்ல இன்றைய இளம் கலைஞர்கள் பலர் இதுபோன்ற சந்தர்ப்பங்களைத் துணிவுடன் சந்தித்து மீண்டு வர வேண்டியிருக்கிறது."

சந்திப்பு : **சீதா ரவி**

படம் : **யோகா**

**ரொ**ம்பவும் எதிர்பார்க்கிறார்கள் 'தேவராகம்' படத்தை. படம் சம்பந்தப்பட்டவர்கள் மட்டுமல்ல... கிட்டத்தட்ட கோடம்பாக்கமே. மூன்று காரணம் அதற்கு. முதலாவது மிகப்பல வருஷங்களுக்குப் பிறகு, பழைய கனவுக் கன்னி (இதற்காக யாரும் கேஸ் போடுவார்களோ?) ஸ்ரீதேவி மறுபடி தமிழுக்கு வருகிறார். இரண்டாவது காரணம், இயக்குபவர் பரதன். வியாபாரப் படங்களுக்கும் விருதுப் படங்களுக்கும் இடையே ஓவர் பிரிட்ஜ் போடுவதில் குறிப்பிடத்தகுந்த வெற்றி பார்த்தவர். (தேவர் மகன் பார்த்தீங்க இல்லை?) அடுத்த காரணம், என்றும் பசுமையான காதல் கதை.

படத்தின் டைட்டிலில் அநியாயத்துக்கு சங்கீத - புராதன நெடி. ஏன் இப்படி என்று பரதனிடம் கேட்டால், ''வைதிகமான குடும்பச் சூழலில் பிறக்கிற காதல் பற்றிய கதை. தோதாக கிளாஸிகல் இசை. ஏழு பாடல்கள். அதான்'' என்றார்.

கதை முச்சூடும் ஓர் அக்ரஹாரத்தில் நடக்கிறது. ஆகவே, புராதன அக்ரஹாரங்கள் நிறைந்த பாலக்காட்டில் படம் எடுத்திருக்கிறார்கள். ஆசார சீலர் ஒருத்தரின் மகளாக ஸ்ரீதேவி. அவருக்கு ஜோடியாக அரவிந்தசாமி.

''ரோஜாவுக்குப் பின் என்னை வெகு பாதித்த கேரக்டர் இந்தப் படத்தில்தான்'' என்று மெனக்கெட்டு ஒரு வட இந்தியப் பத்திரிகைக்கு பேட்டி கொடுத்திருக்கிறார் அரவிந்தசாமி.

என்னவாம் பாதிப்பு?

கதாநாயகன், ஒரு 'சவுண்டி'யாக வருவது அநேகமாக முதல் முறையாக இந்தப் படத்தில்தான்.

ஐயோபாவம் என்று வருத்தப்படலாம் என்றால், ''அப்படி அவன் ஆவதற்குக் காரணமே அவன் கொண்ட காதல்தான்'' என்று பொடி வைக்கிறார்கள். (விளக்கச் சொன்னால் வெள்ளித் திரையில் காண்க என்று பதில்.)

**ப**ரதன், முதலில் இந்தப் படத்துக்குப் புது முகங்களைப் போடத்தான் எண்ணி இருந்து இருக்கிறார். ஸ்ரீதேவி, தயாரிப்பாளரின் யோசனை.

''ஸ்ரீதேவி பல மலையாளப் படங்களில் நடித்திருக்கிறார்தான். ஆனால் என் இயக்கத்தில் நடித்ததில்லை. மிகப்பல வருஷம் முன்னால் எனது ஒரு விளம்பரப் படத்தில் நடித்திருக்கிறார். அது அவருக்கே ஞாபகம் இருக்காது'' என்றார் பரதன்.



* பரதன்

பரதன், இந்தப் படத்துக்காக ஸ்ரீதேவியைத் தொடர்பு கொண்ட போது அவர் டென்ஷனின் உச்சத்தில் இருந்த நேரம். அம்மாவுக்கு ஆபரேஷன் - அமெரிக்க டாக்டர்களின் குளறுபடி...

''ஒரு வழியாக அவர் சென்னை வந்ததும் போய் கதையைச் சொல்லி, ஒரேடியாக முப்பது நாள் கால்ஷீட் கேட்டேன். நாற்பது நாள் நடித்துக் கொடுத்தார்'' என்றார் பரதன்.

**பா**லக்காட்டில் ஷூட்டிங் சமயம் மக்கள் ஸ்ரீதேவியை மொய்த்து விட்டார்களாம். 'அழகிய கார்த்திகை தீபங்களே' என்ற பாடல் காட்சிக்காக ஐந்து லட்சத்தில் செட் போட்டுவிட்டு, முதல் நாலு நாள் ஷூட்டிங்கே நடத்த முடியவில்லை என்று பரதன் சொன்னார்.

''இருபதாயிரம் தலைகள் சுற்றி அவரைக் காணக் காத்திருந்து, ரகளை ஆக, எங்கே நடத்துவது?''

பிறகு வரிசையில் நிற்க வைத்து தேவி தரிசனம் ஆன பிற்பாடு ஷூட்டிங் நடத்தியதை சுவாரஸ்யமாக நினைவு கூர்கிறார் பரதன்.

''இந்த பாக்யலட்சுமி கேரக்டரை ஸ்ரீதேவி தவிர யாராலும் இத்தனை சிறப்பாகச் செய்துவிட முடியாது. பாருங்கள், தேசியவிருது வாங்கப் போகிறார்!'' என்கிறார்கள் யூனிட் காரர்கள்.

— அஷோக்

சிறுகதை : பெண்கள் பிரச்னை

# பெண் அருவி

சத்தியப்ரியன்

வெயில் ஏறிய ஒரு முன்பகல் வேளையில்தான் யாமினி அந்த யோசனையைச் சொன்னாள். சமையல்காரன் கொண்டு வைத்த ஆறிப் போன உப்புமாவும், சாம்பார் என்ற பெயரில் ஒரு காவி நிற திரவமும் முற்றிலும் எனது ஞாயிற்றுக்கிழமை விடுமுறை சுகத்தை அவித்து விட்டிருந்தது.

"ஹொகேனகலா?" என்றாள் ஹெப்ஸிபா.

"இன்னிக்கா?" என்றாள் காயத்ரி.

"நாளைக்கு" என்றாள் யாமினி.

"லீவ் போட்டுட்டா?" என்றாள் ஹெப்ஸிபா.

"கத்தாதே ஹெப்ஸி. வார்டன் காதில் விழுந்தா மொத்தமா வெளில அனுப்பிடுவா."

"தப்பில்லையா?" என்றாள் காயத்ரி தாழ்ந்த குரலில்.

"தப்புதான். ஆனா இந்த ஹாஸ்டலோட பார்த்து சலித்துப் போன கம்பிகள், சுவர்கள், அழுக்குப் படிந்த தலையணை, எட்டு மணிக்கு ணங் என்று பூட்டப்படும் பித்தளை பூட்டு இவை எல்லா வற்றையும் என்றாவது ஒருநாள் மீற வேண்டும் போல வருகிறது. சின்னச் சின்ன பொய்களில் பார்க்கும் சினிமாக்கள் எனக்கு அலுத்து விட்டது."

எனக்கு யாமினி மேல் பரிதாபமாக இருந்தது. அவள்தான் முதன் முதலாக எனது அறையைப் பங்குபோட வந்தவள். ஒரு ஹோல்டால், வயர்கூடை இவற்றுடன் கத்தரிப்பூ கடிதாரில் காதில் பூனை மயிர் மின்ன "என் பேர் யாமினி. தனியார் துறை வங்கியில் எனக்கு க்ளரிகல் போஸ்டிங்" என அறிமுகம் ஆனவள். எந்த போர்வைக்கும் அடங்காதவள் என மூன்றாவது நாளே தெரிந்து விட்டது. "எட்டு மணிக்கு உள்ளே இருக்க இது என்ன ஜெயிலா?" என்றாள். பாத்ரூம் நெரிசல், இரைச்சல், சமையல் எல்லாவற்றிற்கும் எதிர்ப்புக் குரல் கொடுத்தாள். அவள் வந்த பிறகுதான் எனக்கு என் அறையின் ஜன்னல் இன்னும் பெரிதாக இருந்தால் நன்றாயிருக்கும் எனத் தோன்றியது. ஹாஸ்டலின் பின்பகுதியில் மகளிர் சங்கம் நடத்தும் தையல் வகுப்புகளை வேறு எங்காவது பிடுங்கி வைக்கத் தோன்றியது. பெண்களை அவமானப்படுத்தும் முதல் எதிரி தையல் மெஷின் என்பாள் யாமினி. ஏழே முக்கால் வரையில் வெளியில் சுற்றி விட்டு எட்டு மணிக்குத்தான் உள்ளே நுழைவாள். தனி வீடாகப் பார்த்துப் போய் விட்டால் இந்த விடுதி யிலிருந்து விடுதலையாகி விடலாம் என்ற அவளது ஆசை இன்னும் நிறைவேறவில்லை. தனி யாக வீடு கிடைக்கவில்லை. மேலும் கல்யாணம் ஆகும் வரையிலான மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் என்ன மோசமான சாப்பாட்டை சாப்பிட நேரிடினும் சமையலறையில் உழல வேண்டாம் என்ற நினைப்புதான் இவ்வளவு பெண்களையும் கட்டிப் போட்டிருக்கிறது என்பாள்.

மொத்தம் நாலு பேர் தேறினோம். நான், யாமினி, ஹெப் ஸிபா, சாந்தி. காயத்ரி வரவில்லை என்று விட்டாள். மறந்தும் வார்ட



னிடம் போட்டுக் கொடுத்து விடக் கூடாது என யாமினி காயத்ரியிடம் உறுதிமொழி வாங்கிக் கொண்டாள். சஷ்டிகவசம் சொல்லும் வாயால் பொய் சொல்ல வரலை என்பதுதான் காயத்ரி சொன்ன காரணம். ஒரு புனிதமான பெண்ணாகத் தன்னை பாவித்து அவள் சொன்ன நாடகபாணி பாவனையை, யாமினி வழியில் சொல்லி நடித்துக் காட்டினாள். டெலிஃபோன் ஆபரேட்டராக இருக்கும் புவனா விடம் எங்கள் அலுவலக தொலைபேசி எண் களைக் கொடுத்து விட்டு எட்டரை மணிக்கு பஸ் பிடிக்கப் போனோம்.

இதுவரை இப்படி ஊர் சுற்றிப் பார்த்த தில்லை. ஒரு மே மாத வெயிலில் ஏற்காட்டில் மண்டை காய்ந்து விட்டு வந்தோம். வெண்ணெய்க் காப்பு என்று நாமக்கல்லில் ஆஞ்சநேயரைப் பார்க்கப் போயிருந்தோம். மற்றபடி ஷாப்பிங், சினிமா, எக்ஸிபிஷன் இவைகளோடு சரி.

யாமினி ஒருமுறை, ஊரிலிருந்து மாதம் ஒரு முறை பார்க்க வந்த அப்பாவையும், அண்ணனையும் திட்டி அனுப்பினாள்.

"வாரா வாரம் யாராவது ஒரு ஆண். லீலாவோட அப்பா, சுமதியோட மாமா, ஹெப்சிபாவோட அண்ணன்னு வந்து நிக்கறதைப்

பார்த்தா எனக்கு அவமானமா இருக்கு. ஏன்? ஏன் பெண்களை கற்பூரிதியாகவே சிந்திக் கறீங்க? ரொம்ப அபத்தமாப் படவில்லையா? இதே ஊரில் இதே பாங்கில் என் சகஊழியன் ஒருத்தன் மேன்ஷன் ஒண்ணில் இருக்கான். சொந்த ஊர் திருநெல்வேலி. மாசா மாசம் போயிட்டு வர்றான். தனியா. இந்தா இருக்கற திருச்சியிலிருந்து வாரம் ஒரு ட்ரிப் நான் பத்திரமா இருக்கேனான்னு பார்க்க வர்றியேப்பா, நியாயமா இருக்கா?"

அவள் கேள்வியினால் அதிகப்படியான மாற்றங்கள் நிகழவில்லை. காயத்ரியைப் பார்க்க மட்டும் ஒருநாள் விடுத்து ஒருநாள் என சித்தப்பா, பெரியப்பா பையன், மாமா, தம்பி என வந்து கொண்டே இருப்பார்கள். காயத்ரிக்கு பின்னால் அது ஒரு பெருமையாகவே போனது.

ஆற்றுப்படுகை போன்றதொரு மணல் வெளியில் பஸ் நின்றது. வழிபாதைக் கடைகள், ஜனநெரிசல் இவைகளைத் தாண்டி தூரத்தில் மரங்களின் வேர்களைத் தழுவியபடி காவிரி ஓடிக் கொண்டிருந்தது.

"முதல்ல குளிக்கலாமா?" என ஹெப்சிபா கேட்டாள்.

யாருமே இதுவரையில் ஹொகேனகல் வந்த தில்லை. அங்கொன்றும், இங்கொன்றுமாய் காதில் வாங்கி வந்த தகவல் போதுமானதாகத் தெரியவில்லை. முதலில் என்ன செய்யலாம்? யாருமே தொந்தரவு செய்யாத வரையில் பாறையில் உட்கார்ந்து நதியைக் காலோடு நழுவி ஓடச் செய்வது கூட இனிமையாகத்தான் இருக்கும்.

எங்கள் சந்தேகத்தைப் போக்கும்விதமாக ஒரு பரிசல்காரனே "வெயில் ஏறினாக் கூட அருவியில் குளிக்க முடியும். பரிசலில் போக முடியாது. முதலில் பரிசலில் போகலாம் வாங்க" என்றான்.

பரிசல்காரன் பெரிய தொப்பி போல பரிசலை தலையில் சுமந்து வந்தான். பரிசல் சுழல, சுழல தள்ளாடி விழாமல் தொப் தொப் என்று உட்கார்ந்ததை இன்னும் மறக்க முடியவில்லை. சீறும் ஆற்றின் வேகம், கூர்மூக்கால் முட்டும் மீன்களின் ஸ்பரிசம், மேல் தெறிக்கும் ஆற்றின் குளுமை, தூரத்தில் மிக உக்கிரமாய் கொட்டிக் கொண்டிருந்த அருவி எங்களை இருப்பு மறக்கச் செய்தது.

பரிசல்காரன் இறக்கி விட்ட இடத்திலிருந்து அருவியை அடைய அரைமணி நேரமானது.

சிமெண்ட் நடைபாதை காவிரியைப் பிரித்து குறுக்கே போனது. முடிவில் ஒரு மண்டபம். வழிநெடுக எண்ணெய் மசாஜ் செய்பவர்களின் அழைப்பு. நல்லெண்ணெய் மணம் அதிகமாகி காற்றின் ஈரத்தில் கலந்திருந்தது.




ஜட்டி அல்லது அண்டர்வேர் மட்டும் அணிந்தபடி படிக்கட்டுகளில் மிருதியாக ஆண்கள் இறங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் இந்த உடல் மீறிய சுதந்திரத்தில் திமிர் தெரிந்தது. குடும்ப சகிதம் வராமல் கல்லூரி மூலமும் அலுவலகம் மூலமும் சுற்றுலாவாக வந்திருந்த ஆண்கள், அவர்களது மட்டற்ற சுதந்திரத்தை மிகக் கீழ்த்தரமாக பயன்படுத்திக் கொள்ளத் தயங்கவில்லை. மட்டமான பாடல்களைப் பாடினார்கள். ஹோ என்று கத்தினார்கள். கேவலமான சைகைகளைக் காட்டினார்கள். பாதி பேர் மது அருந்தி இருந்தது துல்லியமாகத் தெரிந்தது. புளித்த வாடை வேறு கொன்றது.

பெண்கள் குளிக்கும் இடம் என போர்டு காட்டிய இடத்துக்குள் புகுந்தோம்.

அதிர்ந்தோம்.

நீளமாக ஒரு தொட்டி, உயரத்தில் இருந்தது. செயற்கை முறையில் குழாய்கள் மூலம் நீர் விழுந்து கொண்டிருந்தது. குடிநீர் குழாயின் அளவை விட கொஞ்சம் கூடுதலாக, தோட்டத்து பம்ப் செட்டைவிட மிகக் குறைவாக.

யாமினி பேசாமல் வெளியில் வந்து விட்டாள்.

நாங்களும் அவளைத் தொடர்ந்தோம்.

யாமினி ஆண்கள் இறங்கிக் கொண்டிருந்த அருவித் துறையில் இறங்கினாள். பின் தொடர்ந்த எங்களை ஆண்கள் மறக்காமல் உரசினார்கள், இடித்தார்கள். எனக்கு மலத்தை மிதித்தது போலிருந்தது.

ஆண்கள் "துறையில் காவிரி பொங்கிப் பெருகி கொட்டிக் கொண்டிருந்தாள். நீளமாக கம்பிகள் போட்டிருந்தார்கள். அவள் அடங்காமல் வெளியில் தாவிக் கொண்டிருந்தாள்.

ஆண்கள் கீழே அமர்ந்தும், படுத்தும், நின்றும், அருவியை எதிர்த்துக் குளித்துக் கொண்டிருந்தார்கள். மருந்துக்குக் கூட ஒரு பெண் அந்த அருவியில் குளித்துக் கொண்டிருக்கவில்லை.

"போகலாம்" என்றாள் யாமினி.

**வெ**றுத்துப் போய் ஹாஸ்டல் திரும்பிய எங்களை காயத்ரி மறக்காமல் கேட்டாள்.

"அருவியில் குளிச்சிங்களா?"

"எதில்?"

"பெரிய அருவியில்"

"இல்லை."

"நான் குளிச்சிருக்கேன்!"

"நிஜமாவா?"

"எப்படி?"

"இந்தப் பக்கம் அண்ணா. இந்தப் பக்கம் தம்பி. பின்னாடி அப்பா. இவ்னோ பேர் நடுவில்" என்றாள்.

"சமத்து" என சாந்தி அவள் கன்னத்தைத் தட்டினாள்.

# முத்துவேல் இண்டஸ்ட்ரீஸ்

(முத்துவேல் குரூப் நிறுவனங்கள்)

பொது மக்களின் வேண்டுகோளை ஏற்று பிக்சட் டெபாசிட் திட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்படுகிறது.

## ஆண்டுக்கு

உங்கள் பிக்சட் டெபாசிட்டுக்கு கணக்கிடப்படும் வட்டி விகிதம் **24%**

குறைந்தபட்ச முதலீட்டுத் தொகை ரூ. 10,000/-

உங்கள் குமுலேட்டிவ் டெபாசிட்டுகளுக்கு முதிர்வு தொகை அட்டவணைப்படி அளிக்கப்படும்

| மாதங்கள் | ரூ. 10,000-க்கு முதிர்வு தொகை |
|---|---|
| 12 | 12,600 |
| 24 | 15,876 |
| 36 | 20,004 |
| 48 | 25,205 |
| 60 | 31,756 |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ. 10,000/-

- முதல் டெபாசிட்டிற்குதான் குறைந்தபட்ச தொகை. அதே பெயரில் மீண்டும் டெபாசிட் செய்தால் ரூ. 1000/- அதற்கு மேலும் அனுப்பலாம்.
- மக்கள் சேவையில் 49 ஆண்டுகள்.
- 75% வரை கடன் பெறும் வசதி.
- முதிர்வு தேதிக்கு முன்பே முழுத்தொகை தேவையானாலும் பெற்றுக்கொள்ளலாம்.
- முதிர்வு தேதிக்கு 10 தினங்கள் முன்னதாக நினைவூட்டுக் கடிதம் அனுப்பப்படும்.
- நம்பிக்கையும் துரித சேவையும் எமது தாரக மந்திரங்கள்.

வியாபார வளர்ச்சிக்கு கைராசியான சேவல் மார்க் பைல்களையே எப்போதும் உபயோகியுங்கள்.

**TAG FILE, CLIP FILE, LEVER FILE**

**COMPUTER FILE, FIBRE BOARD FILE, WRITING PAD.**




## MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.
Ph: Off: (0451) 26850 & 27637.
Res : 26858 & 27011 Grams: COCKFILE

**உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி**

"ரிசர்வ் வங்கி சட்டம் அத்தியாயம் IIIC பிரிவு 45S-ன் கீழ் விதிக்கப்பட்டுள்ள வரம்புக்குட்பட்டு டெபாசிட்களைப் பெறுகிறோம்".

ADWAVE/MI/5247



# கால் கொடுத்த கடவுள்

● பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு கார் விபத்தில் என் வலது முழங்கால் - முட்டி கடுமையாகச் சேதமாகி விட்டது. ஓர் எலும்பு தூள் தூளாகி விட, அறுவை சிகிச்சைக்குப் பின்னும் பயனற்றுப் போய், நிற்க, நடக்க இயலாதவனாகி விட்டேன்.

சென்னைக்கு, பரிசோதனைக்காகக் கிளம்ப முடிவு செய்த பின், என் உடன் பிறவா சகோதரர், பாடகர் வீரமணிக்கு என் நிலைமையை விளக்கி, எனக்காகப் பிரார்த்திக்கச் சொல்லிக் கடிதம் எழுதினேன்.

டிசம்பர் இருபத்தி நாலாம் தேதி, வீரமணி அவர்கள் சென்னை மகாலிங்கபுரம் ஐயப்பன் கோவிலில் கச்சேரியில் இருந்த போது, என் கடிதம் அவரிடம் சேர்க்கப்பட்டிருக்கிறது. (இது பின்னால் தெரிந்த விவரம்.) அவர், கச்சேரியை நடுவில் நிறுத்தி விட்டு சன்னிதிக்கு எழுந்து போய் எனக்காகப் பிரார்த்தித்து விட்டு, இறைவன் திருமேனியிலிருந்த சந்தனக் காப்பில் கொஞ்சம் எடுத்து எனக்கு அனுப்பி வைத்திருந்தார், காலில் பூசச் சொல்லி.

நானும் அவ்வண்ணமே செய்தேன்.

ஜனவரி 1. செக்-அப்புக்காக நான் சென்னை வந்தேன். மருத்துவமனைக்குச் செல்லாமல் நேரே மகாலிங்கபுரம் ஐயப்பன் கோவிலுக்குச் சென்றேன்.

நடக்க இயலாமல் கட்டையைப் பற்றிக் கொண்டு, இருவர் தோளில் சாய்ந்து நடந்து சன்னிதானத்தை அடைந்தேன்.

பூஜை முடிந்து கற்பூர ஆரத்தி தொடங்கி இருந்த சமயம்....

கூடி இருந்த அனைவரும் 'சாமியே சரணம்' என்று பக்திப் பரவசத்துடன் குரல் எழுப்ப, நானும் இரு கைகளையும் உயரத் தூக்கி வணங்கி, சரணம் சொன்னேன். அதுவரை தாங்கி இருந்த கட்டைகள் விழுந்து விட, ஆச்சர்யம் - என்னால் சுயமாக நிற்க முடிந்தது!

உடன் வந்தவர்கள் வியப்பில், "உங்களுக்குக் கால் சரியாகி விட்டது!" என்று உரக்கக் கூவ, ஐயனின் அருளை எண்ணி, சிலிர்த்துப் போனேன்.

**— எஸ். கிருஷ்ணன், விருதாசலம்.**

● இருபது ஆண்டுகளுக்கு முன் மைசூர் இரயில்வேயில் பணியாற்றிக் கொண்டிருந்த போது அலுவலக வேலையாக 'ஷிமோகா' சென்றேன். உடன் நண்பர்கள் ஆறு பேர்.

அந்த ஞாயிறு காலை துங்கபத்ராவில் குளித்து விட்டு, அருகிலுள்ள 'கூட்லி' மடத்துக்குச் சென்றோம்.

துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்துள்ள 'கூட்லி மடம்' தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது.

சுவாமி தரிசனம், மடாதிபதி தரிசனம் முடிந்ததும் ஷிமோகா திரும்புகிற அவசரம்.

மடாதிபதியாரிடம் விடை பெற விழைந்த போது, "மதிய உணவை இங்கேயே முடித்து விட்டுச் செல்லலாமே?" என்றார்.

நாங்கள் ஏற்கெனவே ஷிமோகாவில் ஒரு ஓட்டலில் அதற்கு ஏற்பாடு செய்திருந்தோம். அதை அந்தப் பெரியவரிடம் தயங்கிச் சொன்ன போதும், "சாப்பிடாமல் போகக் கூடாது!" என்று அன்புக் கட்டளை இட்டு விட்டார்.

"இங்கே நீங்கள் சாப்பிடுங்கள். அங்கே உங்கள் ஏற்பாடு, தானாக ரத்தாகிவிடும்" என்றார். அப்போது அதை நாங்கள் பொருட்டாகக் கொள்ளவில்லை.

அவர் சொல்லைத்தட்ட இயலாமல் மடத்தின் எளிய, ஆனால் சுவை மிகுந்த உணவை முடித்துக் கொண்டு, அவரிடம் ஆசி பெற்று, கிளம்பினோம்.

ஷிமோகாவை நாங்கள் அடைந்த போது மணி, பிற்பகல் இரண்டு. கடை வீதிகள் வெறிச்சோடிப் போய்க் கிடக்க, பஸ், ஆட்டோ உள்ளிட்ட எந்த வாகனப் போக்குவரத்தும் இல்லை. ஓட்டல்கள், அலுவலகங்கள் யாவும் மூடியே இருக்க, விசாரித்ததில், ஏதோ மோதல்-வன்முறை - கடையடைப்பு!

கூட்லி மடத்துத் தலைவரின் அன்புக்கட்டளைப்படி நாங்கள் சாப்பிடாமல் வந்திருந்தால், பன்-டீ கூடக் கிடைத்திருக்காது!

அவர் எதை நினைத்துக் கொண்டு, 'உங்கள் ஏற்பாடு ரத்தாகி விடும்' என்றாரோ தெரியவில்லை... அது அப்படியே பலித்ததை எண்ணி சிலிர்த்துப் போனோம்.

**— சி. நாச்சிமுத்து, ஈரோடு - 9.**



1996 ஏப்ரல் 7
யுவ பங்குனி 25
மலர் : 54
இதழ் : 36

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# Mr. Dirty!

'மிஸ்டர் கிளீன்' எனத் தம்மைக் காட்டிக் கொள்ள முயன்ற பிரதமரின் சாயம் வெளுத்து விட்டது! ஹவாலா விவகாரத்தில் நடவடிக்கை தொடரும்; சட்டப்படி காரியங்கள் நடக்கும் என்று கர்ஜனை செய்த நரசிம்மராவ் இன்று ஊழலின் மொத்த உருவமான அ.தி.மு.க.வுடன் மீண்டும் கூட்டணி அறிவித்துள்ளார்.

அ.தி.மு.க. அரசின் பேரிலுள்ள ஊழல் குற்றச்சாட்டுகளைப் பட்டியலிட்டால் மாளாது. அந்தப் பட்டியலில் இடம்பெற சமீபத்தில் மூன்று புதிய குற்றச்சாட்டுகள் முளைத்துள்ளன :

கிராம பஞ்சாயத்துக்களுக்கென ஒதுக்கப்பட்ட 134 டீ.வி. பெட்டிகள் கட்சிக்காரர்களால் கையாடப்பட்டிருக்கின்றன;

மின்சார வாரியத்தின் உபயோகத்துக்கென இறக்குமதி செய்யப்பட்டு, தரக்குறைவு காரணமாக நிராகரிக்கப்பட்ட 8760 டன் நிலக்கரி, சென்னை துறைமுகத்திலிருந்து மாயமாய் மறைந்து விட்டிருக்கிறது;

சென்னை தொழிலதிபர் ஒருவரிடம் லட்ச ரூபாய் தேர்தல் நிதி கேட்டு, அதை அவர் உடனே தராததால், அ.தி.மு.க.வினர் அவரை அடித்துக் காயப்படுத்தியிருக்கிறார்கள்.

இவ்வாறு தோண்டத் தோண்ட ஊழலும் அராஜகமும் வற்றாமல் வெளிப்படுகிற நிலையிலும் காங்கிரஸ் தலைமை அ.தி.மு.க.வுடன் கூட்டு நாடியதற்காக நன்றிதான் சொல்ல




வேண்டும்.

ஆம்! இந்த நடவடிக்கையின் மூலம்தானே காங்கிரஸ் தலைமையின் உண்மையான மதிப்பும் நிலையும் என்ன என்பது நமக்கு முழுமையாகப் புரிந்திருக்கிறது! பணமும் பதவியுமே அவர்களுக்கு எல்லாவற்றையும்விட முக்கியமானவை என்பது உறுதியாகி யிருக்கிறது.

தி.மு.க. - மூப்பனார் காங்கிரஸ் கூட்டணி என்ற வலுவான சக்தி தமிழகத்தில் உருவாவதற்கும் இந்த நடவடிக்கையே காரணம். இதற்காகவும் பிரதமருக்கு நன்றி சொல்ல வேண்டும்!

ரஜினிகாந்தின் ஆதரவுடன் தேர்தல் களத்தில் இறங்கும் இக் கூட்டணியை வாழ்த்தி வரவேற்போம்.

தமிழக காங்கிரஸ் தொண்டர்களின் ஜெ. எதிர்ப்பு நிலையை நன்கு உணர்ந்திருந்த நரசிம்ம ராவ், கடைசி நேரம் வரை கூட்டணி அறிவிப்பை வெளியிடவில்லை. அவ்வறிவிப்பைத் தாமதப்படுத்துவதன் மூலம் அதை ஏற்கும் நெருக்கடிக்கு தமிழக காங்கிரஸ் தள்ளப்படும் என்று கணக்குப் போட்டார். ஆனால் அது தப்புக் கணக்காகிவிட, அவர் 'ஏப்ரல் ஃபூல்' ஆக்கப்பட்டிருக்கிறார்.

ஆணவமும் ஊழலும் அராஜகமும் நிரம்பிய ஓர் ஆட்சியை வெளியேற்றும் நல்வாய்ப்பு தமிழக வாக்காளர்களுக்குக் கிடைத்திருக்கிறது.

## அடிமை புத்தி அரசியல்!

**ம**னிதகுலம் அடிமைப்பட்டுக் கிடக்கும் அவலத்தை எதிர்த்துப் போராடினார் ஆப்ரஹாம்




லிங்கன். பணத்துக்கு மனிதர்கள் விற்கப்படும் கேடு ஒழிந்தது.

ஆங்கிலேயருக்கு அடிமை செய்து வாழ மாட்டோம் என்று நம் சுதந்தரப் போராட்ட வீரர்கள் அஹிம்சைப் போர் நடத்தி வெற்றி கண்டார்கள்.

இன்று நிலைமை தலைகீழாகி விட்டது. தங்களைத் தாங்களே அடிமைகளாக விற்றுக் கொள்ள அரசியல்வாதிகள் தயாராகி விட்டார்கள்!

தேர்தல் ஜுரம் தலைக்கேறிய திருநாவுக்கரசு, அ.தி.மு.க.வுடன் தம்மை இணைத்துக் கொண்டு விட்டார்.

தமது அறந்தாங்கி தொகுதியில் நிரம்ப செல்வாக்குப் பெற்றவர் திருநாவுக்கரசு. சொந்த முயற்சியில் அங்கு தேர்தலுக்கு நின்று ஜெயித்திருக்கவும் கூடியவர். அப்படிப்பட்டவரே ஜெயலலிதாவிடம் 'சரணாகதி' அடைந்துள்ளார் எனில் இதற்குப் பதவி முதலான ஆசைகள் தாம் காரணம் என்பது யாருக்குத்தான் புரியாது!

இந்த அடிமை புத்தியினால் அடையக்கூடிய பயன் ரொம்பவும் குறுகிய காலத்துக்குத்தான் நீடிக்கும் என்பது கடந்தகால அனுபவங்கள் உணர்த்தியுள்ள உண்மை. அ.தி.மு.க.வுடன் தங்களை இணைத்துக் கொண்ட பி.எச். பாண்டியன், கே.கே.எஸ்.எஸ்.ஆர். போன்றவர்கள் இன்று இருக்கும் இடமே தெரியவில்லை.

திருநாவுக்கரசும் அவருடன் அ.தி.மு.க.வில் இணைந்த ராகவானந்தம், எஸ்.எஸ். ராஜேந்திரன் முதலானோரும் இத்தகைய நிலையை அடையும்காலம் வெகு தொலைவில் இல்லை.

கவர் ஸ்டோரி : அஜிதன்

# ஹீரோ!

ஹீரோவாகி விட்டார் மூப்பனார். 'எங்களது எண்ணங்களையும் உணர்வுகளையும் எடுத்துச் சொல்லுவோம்; ஆயினும் கட்சித் தலைமை எடுக்கும் முடிவுக்குக் கட்டுப்படுவோம்' என்று கீறல் விழுந்த ரெக்கார்டு போல் இத்தனை காலமாகச் சொல்லிக் கொண்டிருந்த மூப்பனார், இன்று, 'கட்சித் தலைமையின் முடிவை ஏற்க முடியாது' என்று வெளிப்படையாகவே போர்க்கொடி தூக்கி விட்டார். தமிழகம் மட்டுமல்ல; அனைத்திந்தியாவுமே ஆச்சரியமாகப் பார்க்கிறது இந்த ஹீரோவை!

காரணம், மூப்பனாரின் மென்மையும் அமைதியுமான சுபாவம். காங்கிரஸ் கட்சி சொந்தக் காலில் நிற்க வேண்டும் என்பதற்காக, 89-தேர்தலில் தமிழகத்தில் தனித்துப் போட்டியிடச் செய்தார். அப்போது நடந்த நான்கு முனைப் போட்டியில் எதிர்பார்த்த அளவுக்குக் காங்கிரஸால் வெற்றி பெற முடியவில்லை. அதற்கு மூப்பனார்தான் முழுக் காரணம் என்று வாழப்பாடி போன்றவர்கள் அறிக்கை மேல் அறிக்கையாக வெளியிட்டார்கள். விளைவு? தமிழக காங்கிரஸ் தலைவர் பொறுப்பிலிருந்து மூப்பனார் விலக்கப்பட்டார். அப்போதும் அவர் தலைமையை விமர்சனம் செய்யவில்லை!

91-ல் நடந்த தேர்தலில் காங்கிரஸ் கட்சி அ.இ.அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொண்டதையும் மூப்பனாரால் ஏற்க இயலவில்லை. என்றாலும் அவர் தலைமைக்கு எதிராக ஒரு வார்த்தையும் பேசவில்லை என்பது


• கண்ணன்


• அழகிரி


• பீட்டர் அல்போன்ஸ்


• ப. சிதம்பரம்



• சத்தியமூர்த்தி பவன்?



மட்டுமல்ல; தலைமைக்கு எதிரான திரை மறைவு வேலைகளைக் கூட அவர் ஒருபோதும் செய்ததில்லை.

"தலைவர் (மூப்பனார்) சொந்த ஆதாயங்களுக்காக எதையுமே செய்ததில்லை. எதுவானாலும் அதனால் கட்சிக்குப் பயனுண்டா என்று பார்ப்பதுதான் அவர் இயல்பு!" என்கிறார், எம்.எல்.ஏ.வான அழகிரி.

அப்படியானால் இப்போதைய காங்கிரஸ் – அ.இ.அ.தி.மு.க. கூட்டணி கூட காங்கிரஸ் கட்சியின் நலன் கருதி ஏற்படுத்தப்பட்டது என்றுதானே சொல்லப்படுகிறது. அதை எதிர்ப்பானேன்? இது கட்சிக் கட்டுப்பாட்டை மீறிய செயலாகாதா?

இதற்கு அழகிரி, பீட்டர் அல்போன்ஸ் போன்ற மூப்பனாருக்கு நெருக்கமானவர்கள் பதில் சொல்வது ஒருபுறம் இருக்கட்டும்; சாதாரண காங்கிரஸ் தொண்டர்கள் என்ன சொல்கிறார்கள்?

"இப்படியொரு கேள்வியே வரக் கூடாது சார்!" என்று சத்தியமூர்த்தி பவனில் கூடியிருந்த கன்னியாகுமரி மாவட்டத் தொண்டர்களுள் ஒருவர் பதில் சொல்ல ஆரம்பித்த போது, மேலும் ஐந்தாறு பேர் நம்மைச் சூழ்ந்து கொண்டு, ஆவேசமாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள்.

"இந்த ஆட்சியில் தமிழகமே கொள்ளை போய்க் கொண்டிருக்கிறது சார்! சட்டசபையிலும் வெளியிலும் இந்த ஆட்சியின் ஊழல்களைப் பட்டியல் போட்டுப் பேசிய பிறகு, மீண்டும் அதனுடனேயே கூட்டணி வைத்துக் கொள்வதென்பது மானமிழந்த செயல் மாத்திரமல்ல; தமிழ்நாட்டு மக்கள் எக்கேடு கெட்டாலும் பரவாயில்லை. அ.தி.மு.க. ஆதரவுடன் மீண்டும் அவர் (நரசிம்மராவ்) பதவிக்கு வந்தால் போதும் என்கிற சுயநலம். இதை எப்படி நாங்கள் ஆதரிக்க முடியும்? கட்சிக் கட்டுப்பாடு என்கிற போர்வையில் தமிழகத்தின் நலனைப் புறக்கணிப்பது எப்படி தர்மமாகும்?" என்றார்கள் அவர்கள்.

சத்தியமூர்த்தி பவனில் கூடியிருந்த தொண்டர்களின் மத்தியில் மூப்பனார் பேசும் போது, எஸ்.ஆர்.பி., ப. சிதம்பரம், அருணாசலம் ஆகியோரோடு மூப்பனார் பக்கமிருந்த குமரி அனந்தன், அந்தக் கூட்டம் முடிந்த இரண்டு, மூன்று மணி நேரத்திலேயே காங்கிரஸ் – அ.தி.மு.க. கூட்டணியைத் தாம் ஆதரிப்பதாக அறிக்கை விட்டதென்பது இந்தக் கூட்டணியை எதிர்க்கிற தொண்டர்களுக்கும் சரி; தலைவர்களுக்கும் சரி அதிர்ச்சியைத் தரவில்லையா?

எம்.எல்.ஏ. ஹாஸ்டலில் இருந்த தொண்டர்கள் குமரி அனந்தனின் அறிக்கையைக் கேள்விப்பட்டவுடனேயே, "அனந்தன் இருப்திப்படுகிற அளவுக்கு வந்து சேர்ந்து விட்டது; அதனால்தான் இப்படி பல்டியடித்து விட்டார்!" என்று வெளிப்படையாகவே பேச ஆரம்பித்து விட்டார்கள். அனந்தனின் அறிக்கைக்குப் பிறகுதான் மூப்பனார் வீட்டில் அதிகமான கூட்டம் கூட ஆரம்பித்தது.

"இதை நாங்களும் சரி, தலைவரும் (மூப்பனாரும்) சரி - எதிர்பார்த்தோம் என்பதே உண்மை! அதன் காரணமாகத்தான் காலையில் தொண்டர்களிடையே பேசும் போது, 'தொண்டர்களாகிய நீங்கள் எந்தவிதமான பதவியையும் எதிர்பார்க்கவில்லை; அதனால்தான் மானத்தோடு வாழ்வோம் என்று இந்தக் கூட்டணியை எதிர்க்கிறீர்கள். ஆனால் நம்மோடு இருக்கும் சிலருக்குப் பதவி ஆசைகள் இருக்கும். அத

• மூப்பனார் வீட்டில் குழுமியிருந்த பிரமுகர்கள்!





• குமரி அனந்தன்

னால் அவர்கள் அந்தப் பக்கம் போனாலும் போக லாம். இதையெல்லாம் எதிர்பார்த்துத்தான் நாம் செயல்பட வேண்டும்' என்றார் மூப்பனார். அதுதான் நடந்திருக்கிறது இப்போது!'' என்றார் அழகிரி.

நாம் பலரிடம் பேசிப் பார்த்தபோது ஒரு விஷயம் தெளிவாகச் சொன்னார்கள். அதுதான் மாநில புலனாய்வுத் துறையின் அறிக்கை. 'மூப்பனார் அணியும் தி.மு.க.வும் சேர்ந்து போட்டியிட்டால் அபரிமித மெஜாரிடியோடு வெற்றி பெறும் வாய்ப்பு பிரகாசமாக இருக்கிறது' என்று அறிக்கை கொடுத்ததாம் மாநில புலனாய்வுத்துறை. இதை அடிப்படையாகக் கொண்டுதான் டெல்லியில் காய்கள் நகர்த்தப் பட்டதாம்!

காங்கிரஸ் - அ.தி.மு.க. கூட்டணியைப் பெரும்பான்மையாக உள்ள மூப்பனார் அணியினர் ஒருபோதும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்பது ஜெ. தரப்பிலும் சரி, ராவ் தரப்பிலும் சரி ஆரம்பத்திலேயே எதிர்பார்த்தார்கள். எனவேதான் காய்களை கவனமாக நகர்த்தினார்கள். எப்படி?

கூட்டணி உண்டு என்பதை முன்கூட்டியே தெரிவித்து விட்டால் மூப்பனார் அணியினர் உடனடியாகப் பிரிந்து வந்து, தனிக் கட்சியாக இயங்க ஆரம்பித்துத் தேர்தல் கமிஷனிடம் தனியாகப் பதிவுசெய்து, புதிய சின்னத்தையும் வாங்கிக் கொண்டு விடுவார்கள். அதற்கு அவகாசம் கொடுக்காமல் செய்து விட்டால்? வேறு வழியின்றித் தலைமையின் முடிவை ஒப்புக் கொண்டாக வேண்டும்; அல்லது ஆரம்பத்தில் எதிர்ப்புக் காட்டினாலும் பிறகு அடங்கிப் போயாக வேண்டும்.

இவற்றை மீறி அவர்கள் தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்துக் கொண்டால் எந்தச் சின்னத்தில் போட்டியிடுவார்கள்? புதிய சின்னத்தில் போட்டியிடுவதென்பதே ஒரு மைனஸ் பாயிண்ட். மாறாக, உதயசூரியன் சின்னத்தில் போட்டியிட வேண்டி வந்தால், 'பார்த்தீர்களா, தி.மு.க.விடம் அவர்கள் ஒட்டு மொத்த சரணாகதியடைந்து விட்டார்கள்! இதுதான் மானத்தோடு வாழ்கிற லட்சணமா?' என்று எதிர்ப்பிரசாரம் செய்வது சுலபமாக இருக்கும். இதை எதிர்பார்த்துத்தான் கூட்டணி பற்றிய அறிவிப்பை முடிந்தவரை தாமதம் செய்தார்களாம்!

காங்கிரஸ் தொண்டர்களின் பிடிவாதமான எதிர்ப்புக்கும் உற்சாகத்துக்கும் இன்னொரு முக்கிய காரணம், அமெரிக்காவிலிருந்து ரஜினி விட்ட அறிக்கை. மூப்பனார் அணி, தி.மு.க.வுடன் உடன்பாடு வைத்துக் கொண்டால் நிச்சயமாக ரஜினியின் ஆதரவு உண்டு என்கிற நம்பிக்கை. சொல்லப்போனால் அவர் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்து தேர்தல் பிரசாரம் கூட செய்வார் என்கிற எதிர்பார்ப்பு.

தலைவர்களுக்கும் இந்த எதிர்பார்ப்பு இருந்தது. அதனால் தான் ரஜினியின் அறிக்கை வெளியானதுமே அந்த அறிக்கை ரஜினி வெளியிட்டதுதானா என்று ஒருமுறைக்கு இருமுறை சம்பந்தப்பட்டவர்களோடு தொடர்பு கொண்டு உறுதிப்படுத்திக் கொண்டார்களாம்! இப்படி உறுதிப்படுத்திக் கொண்டு செயல்படுவதற்குத்தான் தொண்டர்களிடம் பேசிய மூப்பனார், மேலும் ஒருநாள் அவகாசம் கேட்டார் என்றும் சொன்னார்கள்.

இதுபற்றி தற்செயலாக அன்று நாம் சந்திக்க நேர்ந்த பாண்டிச்சேரி சபாநாயகர் கண்ணனிடம் பேசியபோது, "நான் சபாநாயகர் என்பதால் அரசியல் பேசுவது மரபுக்கு விரோதமானது. ஆனாலும் ரஜினி கொடுத்திருக்கும் அறிக்கையின் முடிவில் 'ஜெய்ஹிந்த்' என்கிற வார்த்தை வரவேண்டிய அவசியம் என்ன? அதற்கு என்ன அர்த்தம்? யோசித்துப் பாருங்கள் விஷயம் விளங்கிவிடும்!" என்றார்.

அவர்சொன்னது பற்றி யோசிக்க வேண்டிய அவசியமில்லாமலே செய்து விட்டார், அடுத்த நாள் மூப்பனார் அணிக்காகக் கலைஞரிடம் டெலிபோனில் பேசிய ரஜினி! இந்த டெலிபோன் பேச்சுக்குப் பிறகுதான் தனிக்

---



**''பெண் பார்க்கப் போனபோது குனிஞ்ச தலை நிமிராம இருந்தா. சரி, ரொம்ப நல்ல பொண்ணுன்னு நினைச்சி மருமகளாக்கியது தப்பாப் போச்சு.''**

**''ஏன்?''**

**''இப்பத்தான் தெரியுது; அவளுக்கு ரொம்பத் தலைக்கனம்னு!''**

**— ஜோஸ் விக்ரம்**

கட்சி என்கிற உறுதியான முடிவுக்கு வந்தார் கள் மூப்பனார் அணியினர். உடனடியாகப் பசிதம்பரமும் அருணாசலமும் டெல்லிக்குப் புறப்பட்டுச் சென்று, தனிக்கட்சி, தனிசின்னம் ஆகியவற்றுக்கான ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தார்கள்.

ஆரம்பத்தில், நரசிம்மராவ் காங்கிரஸும் அ.இ.அ.தி.மு.கவும் செய்து கொண்ட தொகுதிப் பங்கீடு போலவேதான் தாங்களும் தி.மு.க. வுடன் செய்து கொள்ள வேண்டும்; அப்போது தான் தங்களின் பலம் என்ன என்பதை நர சிம்மராவுக்கு உணர்த்த முடியும் என்று மூப் பனார் அணியினர் எண்ணியது உண்மை. ஆயினும் தனிக்கட்சி என்பதும் தி.மு.க.வுடன் கூட்டு என்பதும் மிகவும் தாமதமாக - ஏறத்தாழ தி.மு.க.வின் வேட்பாளர் தேர்வுகள் முடிந்து விட்ட நிலையில் - எடுக்கப்பட்டதால்தான் சட்டமன்றத்திலும் நாடாளுமன்றத்துக்கும் 40-20 என்று வாங்க வேண்டியதாகிவிட்டது.

இந்தத் தவிர்க்க முடியாத சூழ்நிலையை மூப்பனார் அணித் தொண்டர்களும் தெளி வாகப் புரிந்து கொண்டு விட்டதால் - 'இதற்கு மேல் தர முடியாது என்பதல்ல; தர இயலாத சூழ்நிலை தி.மு.க.வுக்கு இருக்கிறது' என்று கலைஞர் சொன்னது நிஜமான வார்த்தைகள் தான் என்பதால் - எந்தவிதமான மனவருத்த மும் இல்லாமல் திருப்தியடைந்திருக்கிறார்கள். எல்லா இடங்களிலும் வெற்றி பெறுவோம் என்கிற நம்பிக்கையோடு தங்கள் தொகுதி களுக்குப் புறப்பட்டுப் போயிருக்கிறார்கள்.

நரசிம்மராவ், ஜெயலலிதாவிடம் பெற் றிருக்கும் தொகுதிகளின் எண்ணிக்கையை விட கலைஞரிடம் மூப்பனார் குறைவாகத்தான் பெற்றிருக்கிறார். என்றாலும் கூட, 'மானம் காப் போம்; மானத்தோடு வாழ்வோம்!' என்று தாம் சொன்னதைச் செயலில் காட்டி, இன்றைய அரசியல் ஹீரோவாக விஸ்வரூபமெடுத்து நிற்கிறார் மூப்பனார்!

இந்த விஸ்வரூபத்துக்குப் பின்னணியில் இருப்பவர் ரஜினி! இனி அவர் எங்கே வந்து தேர்தல் பிரசாரம் செய்யப் போகிறார் என்று எதிரணியினர் நினைத்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில், தமது வெளிநாட்டுப் பயணத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு, ரஜினியே நேரில் வந்து, மூப்பனார் அணி - தி.மு.க. கூட்டணிக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யப் போகிறார் என்பதில் ரொம்பவும் கதிகலங்கிப் போயிருக்கிறது ஜெ. — ராவ் கூட்டணி!

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

படங்கள் : **கிருஷ்ணமூர்த்தி**

# பிரமிப்பூட்டும் சில உயிரினங்கள் நமக்குக் கற்றுக் கொடுப்பது...



எல்லா உயிரினங்களுமே ஆபத்திலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ள நிரந்தரமாகப் போராடி வருகின்றன. அவை தம்மைத்தாமே காப்பாற்றிக் கொள்ள இயற்கை அவைகளுக்கு அற்புதமான ஆயுதங்களை அளித்துள்ளது. பொதுவாக தோலின் விசித்திரமான நிறமே அவற்றின் அருமையான போர்வையாக ஆகிறது அல்லது அவற்றின் முரட்டுத்தோல் எதுவும் ஊடுருவ முடியாதபடி பாதுகாக்கிறது.

**ராட்சஸ எறும்புதின்னி** *(The Giant Pangolin)*

இந்த ஆப்பிரிக்க எறும்புதின்னி எலும்பாலான வாலை உடையது. இதன் மேல்தோலில் கடினமான அடர்ந்த செதில்கள் உள்ளன. இந்தச் செதில்கள் ஒன்றின் மேல் ஒன்றாக அமைந்து பாங்கோலினைப் பாதுகாக்கும் கவசமாகத் திகழ்கிறது. பகைமிருகங்களிடமிருந்து தப்பிக்க அது தனது உடலை இறுக்கி பந்துபோல் சுருட்டிக் கொள்கிறது. ஒரு பெரிய பைன் மரக் கூம்பு போல் ஆக்கிக் கொள்கிறது.

தனது வருமானத்திற்குள் வாழ்வதும் வருங்காலத்திற்காகச் சேமிப்பதும் வழிவழியாக நாம் பின்பற்றி வரும் கொள்கைகள் ஆகும். அப்போதுதான் நாம் எப்பொழுதும் சமுதாயத்தில் தலைநிமிர்ந்து மாற்றுக் குறையாமல் மதிப்புடன் வாழ முடியும். ஆனபோதிலும் இந்த நவீன உலகத்திலே விலைவாசி உயர்வை சமாளிப்பது அவசியமாக உள்ளது. குழந்தைகளின் படிப்பு, திருமணம் இவற்றிற்காகவும் சொந்த வீடு, டி.வி, ஃபிரிட்ஜ், டூ-வீலர் முதலியவற்றை வாங்கவென்றும் மற்றும் தொடர்ந்து ஏற்படும் செலவுகளைச் சமாளிக்கவும் அதற்காகச் சேமிக்கவும் வேண்டிய கட்டாயங்கள் உள்ளன. சேமிக்கவும் வேண்டும், அதே சமயம் உங்களது அந்தச் சேமிப்பு, தேவை ஏற்படும்போது உங்களுக்கு உதவவும் வேண்டும். என்னாளும் நாம் சமுதாயத்தில் தலை நிமிர்ந்து மாற்றுக் குறையாமல் மதிப்புடன் வாழ அப்படிப்பட்ட வழி ஏதேனும் இருக்கிறதா?

# THE VALUE *of* PROTECTION

ராம் காஷ்யப் உங்களது தேவைகளைப் புரிந்து கொள்கிறது. அத்துடன் காலத்தை வென்று நிற்கும் தனது சீட்டுத் திட்டங்களால் அவ்வித உத்திரவாதத்தை அளிக்கிறது. அத்துடன் சேமிப்பு என்பதை மாதாந்திரப் பழக்கமாக ஆக்கி வருகிறது. உடனடித் தேவைகளுக்காக உங்களது செல்வத்தைக் காக்கும் கவசமாகச் செயல்பட்டு வருகிறது.

ராம் காஷ்யப் சிட்ஸ் பிரைவேட் லிமிடெட்டுடன் நீடித்த உறவு தொடர்ந்து நிலவட்டும்.

**நீங்கள் என்றுமே சீட்டுச் சந்தாதாரராக இருந்ததில்லை என்றால் எங்களுக்கு எழுதுங்கள். எந்தவித நிர்பந்தமும் இல்லாமல், எமது அதிகாரிகள் உங்களை சந்தித்து விவரங்களை எடுத்துக் கூறி விளக்குவார்கள்.**



**Ram Kaashyap**

Chits Private Limited

(Member Ram Kaashyap Group)

**நிர்வாக அலுவலகம் :** 1/1 சர் தேசிகா ரோடு (அடித்தளம்),
ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், சென்னை 600 004.
போன்: 4994303, 4998325

**கிளைகள் : சென்னை :** • **மைலாப்பூர்** • **மேற்கு மாம்பலம்** – போன்: 4896638
• **அண்ணா நகர்** – போன்: 610979 • **அடையாறு** – போன்: 418081
• **கோயம்புத்தூர்** – போன்: 231886 • **கும்பகோணம்** – போன்: 24221
• **மதுரை** – போன்: 541802 • **தஞ்சாவூர்** – போன்: 25871 • **திருச்சி** – போன்: 704752
• **ஈரோடு** • **திருவாரூர்**

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தேர்வு**

Insight-1527

• சுமன்த் ராமன்



# டாக்டர் எடுத்த டாக்குமெண்டரி!

சுமன்த் ராமனை டீ.வியில் பார்க்காமல்/ கேட்காமல் இருக்க முடியாது. அபாரமான இங்கிலீஷில் ஆயிரம் வாலா வெடிப்பது போல ஹாக்கி, ஃபுட்பால், டென்னிஸ் காமென்ட்ரி சொல்லிக் கொண்டிருப்பார். பதினோரு வருஷமாக அது சுமன்த்தின் இரண்டாவது தொழில்.

முதல்?

சுமன்த் ஒரு டாக்டர். தற்சமயம் எம்.பி.பி. எஸ்ஸ"க்கு மேல் எம்.எஸ் வேறு படித்துக் கொண்டிருக்கிறார்.

விளையாட்டு வர்ணனையாளராகத் தொலைக்காட்சியில் நுழைந்து, டாகுமென்டரி படத்தயாரிப்பாளராகத் தற்செயலாகப் புது முகம் எடுத்தவருக்கு சமீபத்தில் தேசிய விருது கிடைத்து இருக்கிறது. (National Educational Video Award) விருது வாங்கிக் கொடுத்தது, 'Ballot Power' என்கிற அவரது பத்தொன்பது நிமிட டாகுமென்டரிப் படம்.

அண்ணா பல்கலைக் கழகத்தில் Audio Visual Research Centre (AVRC) என்றொரு பிரிவு இருக்கிறது. உபயோகமான டாகுமென்டரிகள் எடுப்பது இவர்கள் வேலை.

"நாட்டுக்கு உபயோகமா, தேர்தல்- வாக்காளர் விழிப்புணர்ச்சி பற்றி ஏதாவது செய்யுங்க" என்று டி.என். சேஷன் இவர்களைக் கேட்க, சுமன்த்தைக் கூப்பிட்டு செய்யக் கொடுத்து விட்டார்கள் AVRC காரர்கள்.

முன்னதாக 'Encounter' என்றொரு குறும் படத்தை சுமந்த் செய்திருக்கிறார், இவர்களுக்காக. இன்டர்வியூக்களைச் சந்திக்கிற சரியான விதம் பற்றிய டாகுமென்டரி அது. மயிரிழையில் தேசிய விருதைத் தவற விட்டது அது. ("கடைசி நாளுக்கு ஒரு நாள் தள்ளி, கேஸட் போய்ச் சேர்ந்தது!") ஆனால் தூர்தர்ஷனில் அது ஒளிபரப்பான போது வெகு பாராட்டு சுமந்த்துக்கு.

'Ballot Power'ல் அதைத் தக்க வைத்துக் கொண்டிருக்கிறார்.

வண்டியில் போய்க் கொண்டே இருப்பது. திடீரென்று ஓரிடத்தில் இறங்கி, யாரிடமாவது "ஓட்டு போட்டீங்களா?" என்று கேட்பது. 'போட்டேன்' என்றால் ஏன், எதற்கு, யாருக்கு என்று கேள்வி. 'போடவில்லை' என்றாலும் 'ஏன்' என்று கேள்வி. வருகிற பதிலை - நிஜமான காரணத்தை, அப்படியே பதிவு செய்து ஒரு வல்லுனர் குழு முன் வைத்து, ஆராயச் சொல்வது. இதுதான் 'Ballot Power' டாக்குமென்டரியின் கருக். (எலெக்ஷன் சமயம் மறுபடி டிவியில் வரப் போகிறது இது.)

"வோட்டு போடாமல் இருப்பதற்கு, 'அன்றைக்கு உடம்பு சரியில்லை' என்பதிலிருந்து, நாட்டு நடப்புகளில் அக்கறை இல்லாமை வரை எத்தனை காரணம் சொல்கிறார்கள் தெரியுமா?" என்று கேட்கிறார் சுமன்த்.

நாட்டு நலனில் ரொம்பவுமே அக்கறை/கவலை கொள்கிறார். நமது மீடியாக் காரர்கள் சரிவரத் தங்கள் கடமைகளைச் செய்வதில்லை என்று வருத்தப்படுகிறார்.

"சினிமாவைத்தவிர வேறெதுவுமே காட்டுவதில்லை என்று தொலைக் காட்சிகள் கங்கணம் கட்டிக் கொண்டால் எப்படி? தனியார் டீவிக்களில் சொல்ல முடியாத சினிமா ஆதிக்கம். மக்களுக்கே வெறுத்துப் போய் ஒரு நாள் ஒட்டு மொத்தமாக டாட்டா காட்டி விடுவார்கள், இப்படி இருந்தால். உபயோகமான நிகழ்ச்சிகளை ரசிக்கும் படியாக நிச்சயம் தர முடியும். ஏன் செய்ய மாட்டேன் என்கிறார்கள்?" என்று மெய்யான அக்கறையுடன் கேட்கிறார்.

சுமன்த்தின் அப்பா ராமன் ஒரு பிஎச்டி ஹோல்டர். அதுவும் பொலிடிகல் சயன்ஸ். குடும்பத் தொழில் புடைவை வியாபாரம். இவர் எப்படி ஸ்போர்ட்ஸ், டாகுமென்டரி என்று தடம் மாறினார்?

"என் தொழில், மருத்துவம் தான். விளையாட்டு என் விருப்பம். காமென்டரி செய்வது பொழுது போக்கு. இயல்பான சமூக அக்கறையில் டாகுமென்டரிப் படங்கள் எடுப்பதை ஆர்வமுடன் செய்கிறேன். இதனாலெல்லாம் தொழில் கொஞ்சம் பாதிக்கிறதுதான். இருந்தாலும் எதையும் விட்டுவிட விருப்பமில்லை" என்கிறார்.

எகனாமிக் டைம்ஸ், அஸைட் போன்ற பத்திரிகைகளில் விளையாட்டு நியூஸ் எழுதுவதிலும் ஆர்வம் காட்டுகிறார் சுமன்த்.

"சினிமா தாண்டியும் மக்களுக்கு ரசனை அதிகம் இருக்கிறது. வெறும் சினிமாவைத்தான் நம் ஜனங்கள் ரசிப்பார்கள் என்றால் கிரிக்கெட் மாட்சுகளுக்கு எப்படி இத்தனை கூட்டம் சேருகிறது? விஷயம் என்னவென்றால் 'மக்களுக்கு இதுதான் பிடிக்கும்' என்று மீடியாக்காரர்களே முடிவு செய்து விடுகிறார்கள். இந்த நிலை மாறத்தான் போகிறது" என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் இந்த ஆல் ரவுண்டர்.

- கிச்சா

படம் : யோகா

# செல்லுலர் போன்களால் ஆபத்தா?



செல்லுலர் போன்களின் விற்பனை அதிகரித்துக் கொண்டிருக்கும் அதே வேளையில், அதை உபயோகிப்பவர்களுக்குக் காலப்போக்கில் புற்றுநோய், மூளைக் கட்டி போன்றவை வருவதற்கு வாய்ப்புண்டு என்று எச்சரிக்கப்படுகிறார்கள்!

நிஜம்தானா?

"பிளாஸ்டிக் அறிமுகமான போது அது புற்றுநோயை உண்டாக்கும் என்று சொன்னவர்கள் உண்டு. என் அம்மாவே கூட 'பிளாஸ்டிக் கிண்ணத்தில் தயிரை விட்டுச் சாப்பிடாதே; அது உடம்புக்கு ரொம்பக் கெடுதல்' என்று சொன்னதுண்டு. மைக்ரோ-ஓவனில் சமையல் செய்தால் உடல் ஆரோக்கியம் அவ்வளவுதான் என்று பயமுறுத்தியவர்களும் உண்டு. ஆக, எந்தவொரு விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட்டாலும் அது பற்றிய தவறான எச்சரிக்கைகளை ஒரு சாரார் எழுப்புவதும் சகஜம்தான்!" என்கிறார், 'ஆர்.பி.ஜி. செல்லுலர் சர்வீஸஸ்' நிறுவனத்தின் பொது மேலாளர் சசிகுமார்.

"புகையிலைப் பொருள்களால் நிறைய தீங்குகள் ஏற்படும் என்று எச்சரித்த போதுகூட, சிகரெட் தயாரிப்பாளர்கள் அதை ஒட்டு மொத்தமாக மறுத்தார்கள். ஆனால் நடந்தது என்ன? தீங்கு என்பது நிரூபணமாகி விட்டதே! எனவேதான், 'சிகரெட் புகைத்தல் உடல்நலத்திற்குத் தீங்கானது' என்று சிகரெட் பாக்கெட்டுகளில் அச்சிடப்படுவது போல், செல்லுலர் போன்களின் மேலும் அவற்றால் ஏற்படும் தீமைகள் பற்றி எச்சரிக்கை வாசகங்களை வெளியிட வேண்டுமென்பதும் வெளிநாடுகளில் சட்டபூர்வமாகி விட்டதாமே?" என்றோம்.

"மேலைநாடுகளில் குறிப்பிடப்படும் எச்சரிக்கை பற்றி எனக்கு ஏதும் தெரியாது. ஆயினும் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு உலகில் செல்லுலர் போன்கள் அறிமுகப்படுத்தப்பட்டதிலிருந்தே அதனால் விளையக்கூடிய தீமைகள் பற்றிய ஆராய்ச்சிகளும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனாலும் இது வரை புற்றுநோய், மூளைக்கட்டி போன்றவற்றுக்கும் செல்லுலர் போன்களை உபயோகிப்பதற்கும் தொடர்பு உண்டு என்று எந்த ஆராய்ச்சி முடிவும் தெரிவிக்கவில்லை!" என்கிறார் சசிகுமார்.

மருத்துவ உலகில் இது பற்றி என்ன சொல்கிறார்கள்?

"இங்கிலாந்தில் நான் பணியாற்றிய போது செல்லுலர் போன் உபயோகிப்பதால் ஏற்படுவதாகச் சொல்லப்படும் தீங்குகள் தொடர்பான வழக்கு ஒன்று நடந்தது. அதன் முடிவு செல்லுலர் போன் தயாரிப்பு நிறுவனங்களுக்குச் சாதகமாகவே அமைந்தது. காரணம், செல்லுலர் போன்களுக்கும் குறிப்பிட்ட உடல்நலக் கேடுகளுக்குமான தொடர்புகளை எந்த ஆய்வும் சந்தேகமற நிரூபிக்கவில்லை என்பதுதான்!" என்கிறார், தேவகி மருத்துவமனையில் நரம்பியல் நிபுணராகப் பணிபுரியும் டாக்டர் ஸ்ரீனிவாசன்.

இருப்பினும் மருத்துவமனைகளில் காந்த அலைவரிசை முறையில் ஸ்கானிங் செய்யுமிடங்கள் மற்றும் கம்ப்யூட்டர் உதவியுடன் இயங்கும் தீவிர சிகிச்சைப் பிரிவுகளில் செல்லுலர் போன்கள் உபயோகிப்பதைத் தடை செய்திருக்கிறார்கள். இதே போல் விமான நிலையத்தின் கன்ட்ரோல் டவர்களிலும் செல்லுலரை உபயோகிக்கத் தடை!

காரணம்?

"செல்லுலர் போன்களிலிருந்து வெளியாகும் சக்திமிகு அலைவரிசைக் கதிர்கள் அந்த இடங்களிலுள்ள கம்ப்யூட்டர்களில் குறுக்கிட்டுக் குளறுபடிகள் செய்ய வாய்ப்புண்டு என்பதுதான்! மற்றபடி செல்லுலர் போன் குறித்துப் பீதியடையும்படியாக எந்த ஆராய்ச்சி முடிவும் இது வரை வெளியாகவில்லை!" என்கிறார் டாக்டர் ஸ்ரீனிவாசன்.

- ஜி.எஸ்.எஸ்.

# சுஜாதா பக்கம்



தமிழில் தற்காலக் கவிதை எப்படி இருக்கிறது? பெரிய பத்திரிகைகள் கூட தெரியாத்தனமாக புதுக்கவிதைகளைப் பிரசுரிக்கின்றன. காரணம் மாணவர்களிடமும் இளைஞர்களிடமும் வெவ்வேறு அளவில் கவிதாரசனை ஏற்பட்டிருக்கிறது. அண்மையில் ஆனந்தவிகடன் விழாவில் வாலி, அப்துல் ரகுமான், வைரமுத்து மூன்று பேரும் கவிதை வாசித்தார்கள். கைதட்டலின் அளவிலிருந்து வாலியின் விநோத எதுகைகளுக்கு அதிகம் வரவேற்பு இருப்பதை உணர முடிந்தது. (தமிழ் ஏடுகளுக்கு வசந்த காலம் என்னும் சீசன் வந்ததற்கு ரீசன் ஈசன், அல்ல... எஸ்எஸ் வாசன்!)

எதிர் பார்க்கக் கூடிய எதுகைகளிலிருந்து தான் கவிதா ரசனையின் பாலபாடம் தொடங்குகிறது. வாலி, வைரமுத்து, அப்துல் ரகுமான், மீரா, மு. மேத்தா போன்றவர்கள் எல்லாம் Big league என்று சொல்லலாம். அவர்கள் கவிதைகளை உடனே பிரசுரிக்க பத்திரிகைக்காரர்களும் பதிப்பாளர்களும் தயாராக இருக்கிறார்கள்.

அடுத்து வருவது சிறுபத்திரிகைச் சூழல். ஞானக் கூத்தன், கலாப்ரியா, கல்யாண்ஜி, மனுஷ்ய புத்திரன், பழமலய், அழகிய சிங்கர், வைதீஸ்வரன், ராஜகோபாலன், பசவய்யா, இன்குலாப், இளம் பிறை இவர்களுடன் இடமின்மை காரணமாக விட்டுப் போன ஒரு முப்பதுபேர், கவிதையை உயிருடன் வைத்துக் கொண்டு பலப்பல விநோதங்களைச் சாதிக்கிறார்கள். இவர்கள் எழுதும் அடுத்த வரிகளை எதிர்பார்க்க முடியாது. இவர்கள் கவிதையில் அலுப்பு இல்லை. நேரடியாகப் பார்த்து உணர்ந்தவைகளை எழுதுவார்கள். எழுதாத வரிகள் அதிகம் இருக்கும். பலர் சொந்தக் காசை செலவழித்து தொகுப்பு வெளியிடுகிறார்கள். வருஷத்துக்குச் சுமார் முன்னூறு பிரதிகள் விற்கின்றன.

இத் தொகுப்புக்கள் பல கலையம்சம் பொருந்திய அட்டைப்படத்தோடு நேர்த்தியாக அச்சிட்டு வருகின்றன. அண்மையில் எனக்கு வந்த இரண்டு தொகுப்புக்கள் 'மனிதன் என்பது புனை பெயர்' - வசந்த குமாரன்; 'உயிர்த்திரு.' - ஆர்கே.

முதல் புத்தகத்திலிருந்து ஒரு கவிதையை மட்டும் கொடுக்கிறேன், உங்கள் ரசனையை சோதித்துப் பார்க்க:

*"செத்துப் போன*
*வண்ணத்துப் பூச்சியைச்*
*சுமந்தபடி எறும்புகள்*

*பிணத்தைச் சுமக்கும் கவலையில்லை*
*விருந்தைச் சுமக்கும்*
*கர்வமும் இல்லை அவைகளுக்குள்"*

இந்தக் கவிதையில் இரண்டு செய்யுள்கள் உள்ளன. படித்ததும் நீங்கள் பார்த்த எறும்பு வரிசைகளை நினைவு கொள்கிறீர்கள். உங்கள் எறும்புகள் கரப்பான்பூச்சியையோ கல்கண்டுத் துண்டையோ சுமந்து சென்றிருக்க லாம். வண்ணத்துப் பூச்சியைத்தான் சுமக்க வேண்டும் என்று கட்டாயமில்லை. ஏதோ ஒரு இன்பச்சுமை.. எறும்புகளின் விடா முயற்சியும் முட்டாள்தனமான அடிமை வாழ்வும் உங்களுக்கு ஞாபகம் வரலாம்.

இரண்டாவது பகுதியில் இந்த எறும்புகளுக்குக் கவலை, கர்வம் போன்ற மனித குணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இயற்கை நிகழ்ச்சிகளுக்கு மனித குணங்களைக் கொடுப்பது அல்லது மறுப்பது கவிதையின் ஒரு புராதனமான உத்தி. நாய்க்கு நன்றி, நரிக்குத் தந்திரம் போன்று பழங் காலத்து எளிய நாட்டுப்புறக் கதைகளிலிருந்து கிளைத்து இப்போது நவீனமாக்கப்பட்டிருக்கிறது.

இது நேரடியாக இருந்தால் உவமை என்று சொல்வோம். மறைமுகமாக இருந்தால் உருவகம் அல்லது மெட்டஃபர் என்று சொல்வோம். தமிழில் மிக மிக அதிகமாக கவிஞர்களால் பயன்படுத்தப்பட்ட அணி இது. இதை நம் கவிஞர்கள் உதறி எறிய வேண்டிய காலம் வந்துவிட்டது என எண்ணுகிறேன். கவிதையில் வாசகன் பங்கு கொள்ள உவமைகளும் உருவகங்களும் தடையாக உள்ளன. எதுகை மோனைகளைத் துறந்தாற் போல இவைகளையும் துறக்க வேண்டும். குறிப்பிட்ட கவிதையில் இரண்டாவது செய்யுள் எனக்குத் தேவையே இல்லை. முதல் மூன்று வரிகளோடு நிறுத்தியிருந்தால் எப்படிப்பட்ட அனுபவத்தைத் தந்திருக்கும் யோசித்துப் பாருங்கள்.

*செத்துப்போன*
*வண்ணத்துப் பூச்சியை*
*சுமந்தபடி எறும்புகள்*

அவ்வளவுதான். அந்த எறும்புகளுக்கு கர்வமோ கவலையோ என்று கிளைத்தெழும் எண்ணங்களை வாசகரிடம் விட்டு விட்டால் மேற்கொண்டு சிந்தித்து மற்ற வரிகளை அவன் நிரப்புவான்.

இவ்வாறு கவிதையில் பங்கிட்டுக் கொள்வது தான் உயர்ந்த கவிதானுபவம். ஜப்பானிய ஹைக்கூ அதைத்தான் செய்கிறது. வள்ளுவரின் குறட்பாக்களில், குறிப்பாக காமத்துப்பாலில் இந்த அனுபவம் இருப்பதை பார்க்கலாம்.

"ஊடி இருந்தேமாத் தும்மினாள் யாம் தம்மை
நீடுவாழ்க என்பாக்கு அறிந்து"

- நான் கோபித்துக் கொண்ட போது தும்முகிறாள், வாழ்த்துவேன் என்று.

(மீண்டும் அடுத்த வாரம்)



விஷ்வக்சேனன்

## 14. ஸர்ப்பகந்தி

'பொருளின்மீது ஆசை கொண்டவனை செல்வத்தைக் காட்டி மயக்கலாம்; இன்பத்தில் நாட்டமிருப்பவனை மதுவையும் மங்கையையும் காட்டி ஏமாற்றலாம்; பண்டிதனை நல்ல நூல்களைக் காட்டியும், போர் வீரனைப் படைக்கலங்களைக் காட்டியும் சுயநினைவை இழக்க வைக்கலாம்' என்று அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. சிற்பக்கலை பயில்வதற்காக மாறன் அமுதனாருடன் தமிழகம் வந்த யாங்சின், சிற்பக்கலையை மட்டுமின்றி மற்றக் கலைகளையும் - அதிலும் மனிதர்களைத் திறமையாக எடைபோட்டுவிடும் கலையைச் சிறப்பாகக் கற்று வைத்திருந்தான். எனவேதான் சிங்கணனின் போர் வெறியையும் ஆவலையும் தூண்ட யந்திரப் பொறியை இயக்கிக் காட்டியது மட்டுமின்றி, அவன் பிரமிப்பை இன்னும் உயர்த்த அந்தப் பொறியைப் பற்றி விளக்கவும் ஆரம்பித்தான். "சிங்கணா, நூறு வீரர்களின் பணியை இது செய்யவல்லது. இதேபோலப் பாறைகளை எறிந்து கோட்டைகளையும் தகர்க்கலாம். பாறைக்குப் பதிலாக எரியம்புகளைப் பயன்படுத்திப் பல நூறு வீரர்களை ஒரே சமயத்தில் அழிக்கலாம். இதை நகர்த்தியபடியே இயக்கினால் ஏற்படக் கூடிய சேதம் அளவிட முடியாதது. ஆனால்..."

"ஆனால் என்ன?" சிங்கணனின் கேள்வி சற்றுக் கவலையுடன் வந்தது.

"ஆனால் சிங்கணா, இந்தக் கயிறு அறுந்து கிடப்பதைப் பார். மீண்டும் வேறு கயிறு மாட்டுவதற்கு ஒரு நாழிகையாவது வேண்டும். எனவே அறுந்து போகாத கயிறாகப் பயன்படுத்த வேண்டும்" என்றான் யாங்சின்.

"சொல் யாங்சின். அதற்கு என்ன செய்ய வேண்டும்?" யாங்சின்னின் முகத்தில் முறுவல் விரிந்தது. "கயிறுகளை வலுப்படுத்த எனக்கு ஸர்ப்பகந்தியின் வேர்கள் வேண்டும்" என்றான் முறுவலினூடே.

"ஸர்ப்பகந்தியா?" - விழித்தான் சிங்கணன். அவன் முகத்தில் மீண்டும் குழப்பம் படர்ந்தது. "எங்கிருந்து வந்து சேர்ந்தான் இந்தச் சீனன்? வெறும் புதிர்களாகவே அடுக்குகிறானே?" என்று மனத்துக்குள் யாங்சின்னைச் சபித்தானேயொழிய சிங்கணனுக்குத் தன் ஆவலை அடக்கவும் வழி தெரியவில்லை.

சிங்கணன் குழப்பத்தைக் கவனித்த யாங்

தொடர் : சரித்திரக் கதை

சின்னின் முறுவல் இன்னும் விரிந்தது. ''சிங்கணா, தமிழகத்தில் இத்தனை ஆண்டுகளாக அதிகாரமும் ஆட்சி யும் செலுத்தும் நீ, தமிழகத்து மூலி கைகளைப் பற்றி அறியவில்லையா? ஸர்ப்பகந்தியும் ஒரு மூலிகை. அதன் வேர்களில் பதமானவைகளாக எடுத்து, அதன் சாறில் மணிக்கயிறு களை நனைத்து நிழலில் உலர்த்தி னால் பிறகு வாள் கொண்டு வெட்டினாலும் லேசில் அறு படாது. அத்தகைய கயிறுகளைத்

# இந்திரதனுஸ



தான் இந்தப் பொறிகளுக்கு நாண்களாகப் பூட்ட வேண்டும்" - விளக்கினான் யாங்சின்.

"அந்த மூலிகை எங்கிருக்கிறது?" ஆவலுடன் கேட்டான் சிங்கணன்.

"எந்த வனப்பகுதியிலும் அது கிடைக்கும். அதோ கோட்டையின் வெளியே ஓடும் காவிரியின் மேற்புறத்து வனத்திலும்கூட இருக்கும்."

"அப்படியானால் இப்பொழுதே அதை எடுத்துவர வீரர்களை அனுப்புகிறேன்."

"பொறு சிங்கணா. உன் வீரர்கள் அந்த மூலிகையை அடையாளம் காண்பது கடினம். அதிலும் பதம் தெரியாமல் பறித்து வருவதில் ஒரு பயனும் இருக்காது."

"பிறகு என்னதான் செய்ய வேண்டும் என்கிறாய்?" - சிங்கணன் குரலில் எரிச்சல் தெரிந்தது.

"இருபது வீரர்களை அழைத்துக் கொண்டு நீயும் என்னுடன் வா. மூலிகையையும் அதன் பதத்தையும் நான் அடையாளம் காட்டுகிறேன். உன் வீரர்களை விட்டுப் பறித்து எடுத்து வரச்சொல்" என்றான் யாங்சின்.

சிங்கணன் சித்தத்தில், 'இவனுக்கு உதவ கோட்டைக்கு வெளியில் ஆட்களிருக்கக் கூடுமோ?' என்ற சந்தேகம் எழுந்தது. ஆனால் வெளியில் பணியாட்களைத் தவிர எவருமில்லை என்ற நினைவும் கண்ணெதிரில் எழுந்து நின்று, ஆவலைத் தூண்டிய பொறியும் அவன் சந்தேகத்தைத் துடைத்துவிட்டதால் யாங்சின்னின் ஏற்பாட்டுக்கு உடனே ஒப்புக் கொள்ளவும் செய்தான்.

**வா**னத்தில் கூடிநின்ற மேகங்கள் ஒருமுறை தங்களது சங்கீத அறிவைக் காட்டி ஆவர்த்தனம் செய்தன. சாரல் தெறித்த வானம் பலமாகப் பொழியத் தருணம் பார்த்தது.

யாங்சின்னும் சிங்கணனும் புரவிகளில் முன்னால் செல்ல, பின்னால் இருபது வீரர்கள் தொடர, கோட்டை வாயிலைக் கடந்ததும் வானம் பனிச்சிட்டு தொடுவானத்திற்கும் உச்சிக்கும் ஓரிரு கோடிழுத்துப் பார்த்தது. போர் முரசுகளைப் போல் ஒலித்த மேகங்களைத் தொடர்ந்து மழை பிரளயமாக வர்ஷிக்கத் தொடங்கியது. கோட்டையைக் கடந்ததும் யாங்சின்னின் உடல் ஒருமுறை சிலிர்த்தது.

மரப்பாலத்தை அடைந்ததும் புரவிகள் நின்றன. கோட்டைச் சுவரை அடுத்து கூடாரங்களிலிருந்த பணியாட்கள், சிங்கணனும் யாங்சின்னும் மழையில் செல்வதையும் உடன் சென்ற வீரர்களையும் கண்டு பாலத்தை நோக்கி வர ஆரம்பித்தனர்.

புரவியை விட்டிறங்கிய யாங்சின், சுழி நுங்கும் நுரையுமாகப் பொங்கி ஓடிய காவிரியை ஒருமுறை பார்த்தான். பாலத்தின் பக்கவாட்டில் ஓடிய மூங்கில் பிடிமானத்தை ஒரு கரத்திலும் புரவியை ஒரு கரத்திலும் பற்றியவன், பாலத்தின் மீது நடக்க ஆரம்பித்தான். சிங்கணனும் வீரர்களும் தொடர்ந்தனர்.

சற்றுத் தொலைவு நடந்த யாங்சின், முகத்தில் வழிந்த மழைநீரைத் துடைத்துவிட்டு மீண்டும் மூங்கிலைப் பற்ற முயன்றபோது அது வழுக்கியதாலோ என்னவோ சற்றுத் தடுமாறிச் சாய்ந்தான். மளமளவென்று மூங்கில் முறியும் ஓசை கேட்டது. அடுத்த கணம் பொங்கிப் பாய்ந்த காவிரியில் தலைகுப்புற விழுந்தான் யாங்சின். திகைத்து நின்ற சிங்கணனைக் கண்டு மேகங்கள் பெரிதாக நகைத்தன.

**போ**சளரின் பிடியிலிருந்து தமிழகம் விடுபடப்போவதை எண்ணிய மேகங்கள் இடைப்பாடி நாட்டுக் கோட்டையிலிருந்து தப்பிய யாங்சின்னுக்கு உதவியதோடு மட்டுமில்லாது, சோழ எல்லையிலிருந்து துறவியாரின் ரதத்தில் தஞ்சைக்கு விரைந்து கொண்டிருந்த கொங்கு நாட்டு இளவரசிக்கும் பெரும் உதவி புரியத் தீர்மானித்தன. தங்களிடமிருந்த நீரையெல்லாம் ஆனந்தமாகப் பொழிந்து தள்ளிக் கொண்டிருந்தன. ரதத்தினுள் அமர்ந்து சரம் சரமாக இறங்கிய மழையைப் பார்த்தபடியே வந்த இளவரசியின் மனம் அந்த மழையால் நனைந்து குளிர்ந்து கிடந்த சோழ நாட்டு மண்ணைவிட அதிகமாகக் குளிர்ந்திருந்தது. தஞ்சைத் துறவியாரை மட்டுமின்றி உத்தமபாளையத்தில் தன்னைப் பிரிந்து சென்ற ஆதித்யனையும் தஞ்சையில் காணப் போகிறோம் என்ற நினைவு ரதத்தினுள் தெறித்த மழைச்சாரலைவிட அதிக இன்பத்தை அவள் சித்தத்தில் ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

துறவியார் மழையையோ, காற்றையோ, கடும் வெயிலையோ என்றும் லட்சியம் செய்வதேயில்லையென்பதாலும், காவலுக்கும் வீரர்களை உடனே அழைத்துச் செல்வது வழக்கமில்லையென்பதாலும் தஞ்சைக் கோட்டைக்குள் நுழைந்த அவரது ரதத்தைக் கவனித்த

---

**"நாட்டுக்காக மனைவி, மக்களைத் துறக்கவும் தயார்னு நான் பேசியதைப் பற்றிப் பொது மக்கள் என்ன நினைக்கிறாங்க?"**

**"உங்க சின்ன வீட்டோட தூண்டுதல்தான் அதுக்குக் காரணமாயிருக்கும்னு பேசிக்கிறாங்க தலைவரே!"**

**- ஞா. ஞானமுத்து**



போசள வீரர்களும்கூட, தங்கள் கவனத்தை அந்த ரதத்தின் மீது அதிகமாகச் செலுத்த வில்லை. அரண்மனையின் பக்க வாயிலின் வழியே நுழைந்து, உட்புறத்து மண்டப வாயி லில் வந்து இறங்கிய இளவரசியை வரவேற்கத் துறவியாரே வந்து நின்றிருந்தார்.

துறவியாரின் அன்பான வரவேற்பும், சார லில் முழுவதுமாக நனைந்த உடலுக்கு இத மான சுடுநீரின் நீரோட்டமும், நீரோட்டத் திற்குப் பின் வந்த சுவையான உணவும் இள வரசியின் பயணக் களைப்பையும், உடல் அலுப்பையும் அறவே துடைத்துவிட்டதால் அடுத்த இரண்டு மூன்று நாழிகைகளில் புத்து ணர்வு பெற்றாள். துறவியாரின் மேன்மாடத்து அறைக்குள் நுழைந்தபோது அவள் உதயகாலத்துப் பனியில் குளித்த புதுமலரைப் போலவேயிருந்தாள்.

துறவியாரின் எதிரில் யுவானுடன் அமர்ந்து ஏதோ தர்க்கித்துக் கொண்டிருந்த ஆதித்யனின் விழிகளில் அவளைக் கண்டதும் ஒரு பிரமிப்பு பரவியது. அந்த விளையாட்டு விழிகள் அவளை விழுங்கிவிடுவது போல் பார்த்தன. வெளியில் மெல்ல அடங்கத் தொடங்கியிருந்த மழை அவள் உள்ளத்தில் பொழிய ஆரம்பித்தது.

"உள்ளே வா பூங்கோதை" என்று பரிவு நிரம்பிய குரலில் அழைத்த துறவியார், தமக் கருகிலிருந்த இருக்கையில் அவளை அமர்த்த வும் செய்தார். அந்தப் பரிவும் அன்பைப் பொழிந்த பெருவிழிகளும் அவளுக்குத் தந்தையை நினைவுபடுத்திவிடவே, இளவரசி யின் முகத்தில் சற்று துக்கத்தின் சாயையும் படர்ந்தது. அவள் எண்ண ஓட்டத்தைத் துறவி யார் புரிந்து கொண்டதால், "பூங்கோதை, ஸ்காந்தபுரத்து அரண்மனைக்குச் சென்றும் தந்தையைக் காணாமலேயே வந்துவிட்டதைக் குறித்து வருந்தாதே. உன் தந்தை அவநிதனை மீண்டும் கொங்கு நாட்டின் சுதந்திர மன்ன னாக விரைவிலேயே காணலாம்" என்றார் அதே பரிவுடன்.

தொடர்ந்து, "பூங்கோதை, மருத்துவர் உன் னிடம் தனிப்பட ஏதும் கூறியனுப்பினாரா?" என்றும் வினவினார்.

நீர்த் திரையிட்ட விழிகளைத் துடைத்துக் கொண்ட இளவரசி, "ஆம், கார்காலம் துவங்கி விட்டது என்று கூறச் சொன்னார்" என்றாள்.

துறவியாரின் பெருவிழிகளில் புதிதாக ஒரு மகிழ்ச்சி மலர்ந்தது. "நன்று, நன்று. இதைத் தான் எதிர்பார்த்தேன்" என்றவர், "இன்னும் விஜயன் ஏன் திரும்பிவரவில்லை?" என்று தனக்குள் கேட்டுக் கொள்ளவும் செய்தார்.

"விஜயனை எதற்கு எதிர்பார்க்கிறீர் துறவி யாரே?" - ஆதித்யனின் குரல் இடையில் குறுக் கிட்டது.

ஆதித்யனையும் யுவானையும் ஒருமுறை நோக்கியவரின் விழிகளில் விஷமம் படர்ந்தது.



''எங்க ஆபீஸ் ஸ்டாஃபுங்களுக்கு லஞ்சம் வாங்குறதுக்கே நேரம் போதலே.''

''அப்படியா?''

''பின்னே மாசம் பொறந்து தேதி மூணு ஓடிப் போச்சு. நானும் கரடியாக் கத்திப் பார்த்துட்டேன். ஒரு பயல் கூட இன்னும் சம்பளம் வாங்க வரலேன்னா பார்த்துக்கோ யேன்!''

- ஆலத்தம்பாடி ராஜகோபால்

---

"ஆம் ஆதித்யா. யுவானின் தந்தையைப் பற்றிய செய்தியொன்றை எதிர்பார்க்கிறேன். உங்கள் குருதேவர் மாறன் அமுதனாருடைய திட்டத்தின் முதற்படி அதுதான்."

யுவானின் மஞ்சள் முகத்தில் வியப்பு விரிந் தது. "என்ன கூறுகிறீர் துறவியாரே? பாண்டி யரும் மறைமுகமாக சோழரும் போசளருடன் தொடுக்கப் போகும் இந்தப் போரில் எங்கோ சிறைப்பட்டிருக்கும் என் தந்தை என்ன உதவி செய்ய இயலும்?" யுவானின் கேள்வியிலும் வியப்பு தொனித்தது.

"ஆம் யுவான். பாண்டியர் சேரருடன் தொடுத்த முதற் போரில் பாண்டியர் படை பலம் மிகக் குறைவு. யுத்த தந்திரமும் இணைய, பாண்டியர் யாங்சின்னுடன் சேர்ந்து அமைத்த யந்திரப் பொறிகளும்தாம் சேரனை எளிதில் வெற்றி கொள்ள உதவின. அப்பொ முது முதல் சிங்கணனுக்கு யந்திரப் பொறி களைப் பற்றிய பித்து அதிகரித்தது. அதற்கா கவே யாங்சின்னைச் சிறையெடுக்கவும் செய் தான் அவன். சிங்கணன் கவனத்தைத் திசை திருப்பவும், அந்த அவகாசத்தில் படை திரட்ட வும், மாறன் அமுதனாரும் யாங்சின்னும் சிங்கணனுக்கு யந்திரப் பொறிகளின் மீதிருந்த ஆவலைப் பயன்படுத்திக் கொண்டார்கள். எனக்கும் சோழ வீரர்களைப் பாண்டிய நாட்டிலும் கொங்கு நாட்டிலும் பாண்டியர் படைகளுடன் ஊடுருவிக் கலக்க அவகாசம் தேவையாயிருந்தது.'' - துறவியார் அளித்த விளக்கம் யுவானை மட்டுமின்றி ஆதித்யனை யும் வியக்க வைத்தது.

துறவியார் தொடர்ந்தார்: "அதுமட்டுமல்ல ஆதித்யா, போசளரை விரட்டியபின் தொண்டை மண்டலத்தில் காகதீயரையும் இடையில் எவருக்கும் அடங்காத காடவ




# ஸ்ரீராமின் சித்திரை கோலாகலம்

## ஏப்ரல் 4-13, 1996


1

ஒவ்வொரு நாளும் பட்டுவாடா செய்யப்படும் ஏலத்தொகை ரூ.2 கோடி. விரைந்து எட்டிக் கொண்டிருக்கும் வணிக இலக்கு ரூ.1000 கோடி. தொடர்ந்து பெருகிவரும் சந்தாதாரர்களின் எண்ணிக்கை 11 லட்சம்.

கல்வி, திருமணம், வர்த்தகம், எதிர்பாராத தேவை என எதுவாக இருந்தாலும் சந்தாதாரர்களுக்கு உடனடியாக உதவும் நண்பனாக ஸ்ரீராம் சிட்ஸ் விளங்குகிறது. நீங்களும் உங்கள் வாழ்க்கையில் ஒரு புதுமலர்ச்சியைப் பெற வேண்டாமா? ஸ்ரீராம் இயக்கத்தில் இன்றே உறுப்பினர் ஆகுங்கள். அதுமட்டுமல்ல - ஒவ்வொரு புதிய சந்தாதாரருக்கும் ஓர் அழகிய பரிசும் உண்டு - எப்போதும் போல.


2


3


4


5


6


7


8


9


10


11



## சந்தாதாரர் பரிசுகள்

| வ. எண் | சீட்டு மதிப்பு/ ரூபாயில் | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1. | 250 x 40 = 10,000 | SS ஸ்வீட் ட்ரே (2) |
| 2. | 500 x 30 = 15,000 | 5 கிராம் வெள்ளிக்காசு |
| 3. | 625 x 40 = 25,000 | மூடியுடன் கூடிய 2 SS பௌல்கள் |
| 4. | 500 x 60 = 30,000 | மில்டன் இமாஜினேஷன் வாக்வம் ஃப்ளாஸ்க் |
| 5. | 1,000 x 50 = 50,000 | SS CB தேக்சா |
| 6. | 2,500 x 30 = 75,000 | SS CB ஃப்ரையிங் பான் |
| 7. | 2,500 x 40 = 1,00,000 | காளி SS காசரோல் |
| 8. | 5,000 x 30 = 1,50,000 | SS இட்லி குக்கர் |
| 9. | 5,000 x 40 = 2,00,000 | ஹாக்கின்ஸ் மிஸ்மேரி 4.5 லிட்டர்ஸ் பிரஷர் குக்கர் |
| 10. | 10,000 x 30 = 3,00,000 | காளி SS குக்கர் 5 லிட்டர் |
| 11. | 20,000 x 25 = 5,00,000 | 4 கிராம் தங்கக் காசு |

* நுழைவுக்கட்டணம் தனி

* முன் அங்கீகாரம் பெறப்பட்டது

# ஸ்ரீராம் சிட்ஸ்

# 10 லட்சத்திற்கும் மேலான சந்தாதாரர்களின் இதயங்களில் இடம் பெற்றுள்ள பெயர்!

## மறைந்திருக்கும் பரிசை அடைய வழி:



















இப்பொழுது உள்ள சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படும் அஞ்சலில் ஒரு அழகிய சின்னஞ்சிறு காற்றாடி இடம் பெற்றிருக்கும். ஸ்ரீராம் கிளையில் ஒரு புதிய சந்தாதாரரை அறிமுகம் செய்தவுடன் அதனைக் கொடுத்து பரிசுக் காற்றாடிக் கூப்பனை பெற்றுக்கொள்ளலாம். இதில் உள்ள நூலை இழுக்கும் போது, 3 இலக்க எண் தென்படும். அதன் கூட்டுத் தொகைக்கேற்ப உங்கள் பரிசை நீங்கள் பெற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு பரிசுக் காற்றாடிக் கூப்பனுக்கும் உங்களுக்கு ஒரு பரிசு உண்டு. ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் சிந்தாமணி டப்பா முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.

## தொடரும் பரிசுக் குவியல்:

இந்த அறிமுகப்படுத்துவோர் பரிசுகளைத் தவிர, ஆண்டு முழுவதும் உங்களுக்காகப் பரிசுகள் காத்திருக்கின்றன. மொத்தம் ரூ. 4 கோடி மதிப்புள்ள 402350 பரிசுகள். கைனடிக்ஹோண்டா முதல் 2 கிராம் தங்கக்காசு வரையுள்ள மாதாந்திர சூப்பர் குலுக்கல் பரிசுகளும், 4 கிராம் தங்கக் காசு முதல் மாருதி 800 கார் வரையுள்ள பம்பர் குலுக்கல் பரிசுகளும் இவற்றுள் அடங்கும்.







**ஸ்ரீராமில் சேர்ந்திடுங்கள்.**
**பரிசுகளை வென்றிடுங்கள்.**

- கிளைமேலாளர் முன்னிலையில் மட்டுமே காற்றாடியைத் திறக்க வேண்டும்.
- அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.
- அறிமுகப்படுத்துவோருக்காக மறைந்து காத்திருக்கும் பரிசுகளில் அடங்குபவை SS மிக்ஸ்போல், 4 கிராம் தங்கக்காசு முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.




**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.
**ஸ்ரீராம்** சிட்ஸ்
தமிழ்நாடு லிமிடெட்.
நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700/8523932/8522651/
8525536/8520797

**ஸ்ரீராம் சிட்ஸ் - உங்கள் வளமைக்குப்பாதை.**



**''என்னத்தை முழுங்கித் தொலைச்சே? அதை முதல்லே சொல்லு....''**

**- 'சிரி சிரி' முரளி**

---

மன்னனையும் ஒடுக்க வேண்டும். அப்பொழுதுதான் தமிழகம் பூரணமாக விடுதலை பெறும்.''

துறவியார் கூறியது உண்மை என்பது ஆதித்யனுக்குப் புரிந்தது. யுவானும் இளவரசியும் பிரமிப்பில் உறைந்து போயிருந்தனர்.

துறவியார் தொடர்ந்தார் : ''அதிருக்கட்டும் ஆதித்யா, கொங்கு நாட்டில் துவங்கப் போகும் போர் அத்துடன் மட்டும் நிற்கப் போவதில்லை. நான் கூறியபடி இந்திர தனுசு பற்றிய ஓலையுடன் எனது ஓலையையும் எடுத்துக் கொண்டு உன் குருநாதரைக் காண வேண்டும். அதற்குமுன் விஜயன் மட்டுமின்றி, நாளை சிங்கணனிடமிருந்து அத்தாட்சி ஓலையுடன் அந்தக் காங்கேயன், சாளுக்கிய சேமகேசி இங்கு வருவான் என்று எதிர்பார்க்கிறேன். நீங்கள் மூவரும் அவன் கண்ணிலோ மற்ற போசள வீரர்கள் கண்களிலோ பாடமலிருக்க வேண்டும்'' என்றார்.

துறவியாரின் இந்த வேண்டுகோள் ஆதித்யனுக்கும் இளவரசிக்கும் சங்கடத்தை அளித்தது என்பது அவர்கள் முகங்களில் தெரிந்தது. யுவானின் முகத்தின் அத்தகைய சங்கடம் ஏதுமில்லை. மாறாக அவன் மஞ்சள் முகம் சித்தத்தில் ஏற்பட்ட உஷ்ணத்தால் இலேசாகச் சிவந்தது. ''அந்தச் சாளுக்கிய ஒற்றனுக்கு அஞ்சி எங்களை இங்கு மறைந்திருக்கச் சொல்கிறீர்களா?'' என்ற அவன் கேள்வியிலும் அனல் தெறித்தது.

துறவியாரின் பதில் உறுதியாக வந்தது. அவரது பெருவிழிகள் யுவானையும் ஆதித்யனையும் திடமாக ஏறிட்டன. ''யுவான், வேங்கை பதுங்குவதும், வில் வளைவதும் பாய்வதற்காகத்தான். வெறும் வீரம் மட்டும் எல்லாவற்றையும் சாதித்து விடுவதில்லை. அத்துடன் விவேகமும் இணையும்போதுதான் பூரணமான வெற்றி கிடைக்கிறது. சேமகேசி இங்கு வருவது இங்கிருக்கும் மூவாயிரம் போசள வீரர்களை அழைத்துக் கொண்டு உத்தமபாளையத்தில் தாக்குதலைத் தொடங்க. அதேசமயத்தில் வடகொங்கிலிருக்கும் படைகளுடன் சிங்கணன், சேமகேசியைப் பின்தொடர்ந்து பாண்டியர் எல்லையில் நுழைவான்'' என்ற துறவியாரின் சொற்கள் பாதியில் நின்றன.

அறை வாயிலில் சோழ வீரன் ஒருவன் வந்து, நின்று கொண்டிருந்தான். ''மன்னிக்க வேண்டும். தங்களைக் காண ஒருவன் வந்து காத்திருக்கிறான். இடைப்பாடி நாட்டிலிருந்து வருவதாகத் தங்களிடம் தெரிவிக்கச் சொல்கிறான்'' என்றான் வீரன்.

துறவியாரின் விழிகள் ஜொலித்தன. ''உடனே அவனை அழைத்து வா'' என்ற அவர் உத்தரவும் வேகத்துடன் வந்தது.

சற்று நேரத்தில் உள்ளே நுழைந்து வணங்கியவன் தலையில் பெரும் முண்டாசு ஒன்று சுற்றியிருந்தான். அவன் முகத்தில் கறுத்த பெரும் மச்சத்தையும் நீண்ட மீசையையும் அடர்ந்த புருவங்களையும் கண்ட துறவியாரின் முகத்தில் ஆனந்தம் தெரிந்தது. அவன் கரத்தில் மரங்களை வெட்ட உதவும் நீண்ட கோடரி ஒன்றும் இருந்தது. உடன் வந்து அந்த மனிதனைத் தடுத்தபடியே நின்ற சோழ வீரன், ''பிரபு, இதுபோன்ற ஆயுதங்களுடன் எவரும் அரண்மனைக்குள் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை என்று பலமுறை எச்சரித்தேன் - இவன் கேட்கவில்லை'' என்றான் முறையிடும் குரலில்.

''அதனால் பாதகமில்லை. நீ செல்லலாம்'' என்று வீரனை நோக்கி உத்தரவிட்ட துறவியார், தயங்கித் தயங்கி அவன் மெல்ல வெளியேறியதும் மரம் வெட்டும் கோடரியுடன் நின்ற அந்த மனிதனை, ''ஏன், அங்கேயே நிற்கிறாய்? வா உள்ளே'' என்றும் அழைத்தார்.

உள்ளே நுழைந்த அந்த மனிதன் அறையிலிருந்த மற்ற மூவரையும் ஏறிட்ட பார்வையில் விஷமம் வழிந்தது. யுவானை நோக்கித் திரும்பிய அவனது விழிகளில் சந்தேகச் சாயையும் பரவியது. துறவியாரை நோக்கித் திரும்பியவனின் குரல் கரகரத்து ஒலித்தது. ''பிரபு, இதோ நிற்கும் சீனன் இரண்டு தினங்களுக்கு முன்பு இடைப்பாடி நாட்டில் இறந்துவிட்டான். மீண்டும் உயிருடன் இங்கு எப்படி வந்தான்?'' என்றான்.

அவன் வார்த்தைகளின் பொருள் அந்த அறையிலிருந்தவர்களுக்கு நன்றாகவே புரிந்ததால் அவர்கள் திடுக்கிட்டனர். அடுத்தாற்போல் அவன் பேசிய சொற்கள் அவர்களை மேலும் திகைப்படையச் செய்தது :

''பிரபு, தாங்கள் கூறியபடி கொங்கு நாட்டிலிருக்கும் போசளர் படைகளுடன் சிங்கணன் வரப்போவதில்லை....''

(தொடரும்)

சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்

சிறுகதை :

தலைமுறை இடைவெளி

சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்

# சின்னக் கவலைகள்

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்

“தாத்தா... ஃப்ரிட்ஜ்ல மூணு பூமர், ரெண்டு ரீக்லி, பஞ்ச் எல்லாம் வச்சிருக்கேன். இதப் பாத்தியா... கலர் நான் குடுத்தேன். இது மரம். இது சன்...”

ஆதர்ஷ் கடைபரத்தினான். நடேசன் அவனை இறுக்கி முகர்ந்தார்.

இன்றுதான் ஊரிலிருந்து வந்திருக்கிறார். வழக்கமான பெரியவர்கள் சம்பந்தப்பட்ட உரையாடல்... முடிந்து விடும் போது பையன் அதற்கென்றே காத்திருந்து, இவர் கையை நீட்டியதும் ஆரம்பித்து விடும் ஜமாபந்தி.

பையன் நல்ல நினைவாற்றல்காரன். போன பயணத்தின் போது கடைசியாய் எதில் விட்டானோ அதன் அடுத்த புள்ளியிலிருந்து தொடங்கும். சொல்வதற்கென்று ஆரம்பித்தால் சின்ன விஷயமாவது, அல்ப சமாசாரமாவது.

மாப்பிள்ளை இன்னும் ஆபீசிலிருந்து வரவில்லை. வரும் நேரம்தான். உள்ளே மகள் எண்ணெய் சம்பந்தப்பட்ட பதார்த்தம் பண்ணும் வாசனையும், சொய்யென்று சப்தமும் வந்தன. இப்போதைக்கு அவளுடைய இடையூறும் இல்லை. பயலைக் காலாறக் கொண்டு போனால் என்ன...

பையனுக்கும் தாத்தாவின் அலைவரிசைதான். “தாத்தா.... டாட்டா போலாமா?”

“ம்மா... ராது.. இப்ட... கொஞ்ச தூரம் போயிட்டு வரோம்...”

அவள் 'ம்' சொன்ன மாதிரி தெரியவில்லை. சொல்லாவிட்டாலும் பாதகமில்லை. இவரும் சொல்ல வேண்டுமென்றில்லை. என்னவோ இதெல்லாம் காரண காரியமின்றி வழி வழியே வருகின்றன.

“ம். அப்புறம்... ஒங்க க்ரச்ல யார் யார் ஒனக்கு ஃப்ரெண்ட்...”

“சகாப்தீன், விசி, அன்பழகன்...” பையன் மழலையில் சொன்னதைக் கொண்டு பெயர்களை அனுமானித்தார். பார்த்தால் இரண்டரை என முடியாது. வளர்த்தி, பேச்சு, நடவடிக்கை, உடல்வாகு எல்லாவற்றிலும்.. பையனை இறுக்க, நடை தடுமாறினான். 'போ தாத்தா' எனச் சிணுங்கினான்.

'ஷ்ரக்' என்று சீவிக் கொண்டு போனான் ஒரு மோட்டார் பைக்காரன். போட்டிருந்த சட்டை பறந்தது. தாத்தா பேரன் இருவரையும் ஏக காலத்தில் துணுக்குற வைத்தான். அவனும் பொடியன்தான்... இளங்கன்று... எப்படித்தான் லைசன்ஸ் தருகிறார்களோ. அல்லது லைசென்ஸ் இல்லாத ஓட்டமோ...

“கண்ணு... ப்ளாட்பாரத்துல ஏறிக்க...” அவருக்கு இன்னும் நடுக்கம் போன பாடில்லை. பார்க் நெருங்கி இருந்தது.

இவரைப் பெஞ்சில் அமரச் செய்து விட்டு பையன் சறுக்கு மரம் ஆடினான். மணலை வாரி இறைத்தான். புல்லில் புரண்டான். இவர், தானே அவனானது போலக் கரைந்து போனார். பையனுக்கு இது வடிகால். பாவம் குழந்தை. க்ரச்சும் க்ரில் கேட்டும் என்றே ஆகும் தினசரியிலிருந்து ஒரு மாறுதல் கிடைத்தால் கரைபுரளாமல் என்ன செய்யும்...

சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்
சின்னக் கவலைகள்

இப்போது வந்த மாதிரிதான் இருந்தது. அதற்குள் யாரோ சாயம் பூசியது போல வானம் நிறம் மாறி இருட்டிப் போயிருந்தது.

"ப்பா... கண்ணூ..." குழந்தைகளின் கூச்சலில் இவர் குரல் எடுபடாமல் போனது. நாழியாகி விட்டது. கொஞ்ச நாளாய்க் கண்ணில் மச மசப்பு. பையனைப் பத்திரமாய்ச் சேர்க்க வேண்டுமேயென்று புதிய கவலை சுரந்தது.

"ராஜா..." பையன் தாத்தாவை அலட்சியம் செய்யாமல் அருகில் வந்தான். 'தாத்தா... ப்ளீஸ் தாத்தா... இன்னும் டென் மினிட்ஸ்... கெஞ்சிக் கேட்டுக்கறேன் தாத்தா."

இவருக்கு சிரிப்பு உடைப்பெடுத்தது. அவன் இறைஞ்சுவதே ரசமாய் இருந்தது. தன்னுடைய மூன்று வயதில் கெஞ்சிக் கேட்டுக் கறேன் என்கிற வார்த்தை தனக்கு அத்துப் படியாயிருந்ததா என்கிற விசாரணையில் வியப்பு எழுந்தது.

ஆயினும், இருக்கும் கண்பார்வையில் இவனைச் சேர்த்து விட வேண்டும்... "நாளைக்கு.... கமான்" கையைப் பிணைத்துக் கொண்டார்.

பொய்யென்று உறைத்ததும் கசந்தது. நாளை இந்நேரம் பஸ்ஸில் ஊர் திரும்பிக் கொண்டி ருக்க நேரிடும்... இப்போதைக்குப் பையனைச் சரிசெய்யக் கொண்டுள்ள உபாயம் மலிவான தாகவே பட்டது. பையன் எவ்வளவு சமர்த் தனோ அவ்வளவு அடமும் கூட. சங்கு பிடித் தால் சர்வேஸ்வரன் வந்தாலும் நிறுத்த முடி யாது.

"தாத்தா... நாளைக்கு ரெடியா இரு. க்ரச் லேந்து நேரா இங்க வந்துடணும்" கையை ஆட்டிப் பேசியதில் தீர்மானம்.

"ஆஹா" என்றார் குற்ற உணர்வுடன்.




"ஆதர்ஷ்.... செவரல் டைம்ஸ் ஐ டோல்ட்... ம்... கெட் அப்..." பையனின் அப்பா மிரட்டலில் மின்சாரம் பட்டது போய் பையன் துள்ளி எழுந்தான். இதுபோன்ற சின்னச் சின்ன விஷயங்களிலெல்லாம் மாப்பிள்ளை ரொம்பவும்தான் கண்டிப்பாக இருப்பதாகவே தோன்றுகிறது. தூங்குவது எவ்வளவு சுகமான விஷயம். அதுவும் குழந்தை உறங்கும் அழகைப் பார்ப்பது எவ்வளவு சுவாரஸ்யமான விஷயம். பாவம் பயல்... அவனது விடியலே மிரட்டலு டன் ஆரம்பமாகிறது.

பையன் தாத்தாவைப் பார்த்துச் சிரித் ததில் இருவருக்கும் உள்ள ஏதோ ஒரு இயலாமை தென்பட்டது.

"ம்... ஆதர்ஷ்... காம்ப்ளான் இந்தா... ப்ராண்ட் சியில் ப்ராண்ட் ஹெச்சை விட..." மகள் கொஞ்ச, பையன் பாக்கி விளம்பர வாசகத்தை ஒப்பித்தான். எனி னும் குடிக்கும் போது லேசாய் முகம் சுளித்தான்.

அடுத்த அரை மணியில் அவரைத் தவிர அனைவரும் ஒருவித வேகமான இயக்கத்தில் இருந்தனர். இவர் சாட்சி பாவத்தில், அவர்களுக்கு உதவவும் முடி யாமல், வேடிக்கை பார்க்கவும் முடியா மல் முள்ளில் அமர்ந்தவரைப் போல அசௌகரியமாய் இருந்தார்.

"தாத்தா... சவினிங்..." பையன் நெருங்க, பெண் அவனது காலையும் சட்டையைச் சரி செய்தபடி சிணுங் கினாள்.

போய் வருகிறேன் என்றால் பையன் அனாவசியமாய்ச் சிரமப்படுவான்... மாப் பிள்ளை ஸ்கூட்டரைத் திருகி உறும விட்டுக் கொண்டிருக்கிறார்.

"ஆதர்ஷ்... சமர்த்தா இருக்கணும். நல்லா படிக்கணும்" பதில் பேச அவன் இருந்தால் தானே.

பஸ்ஸில் ஓரமாய் இருக்கை...

பஸ்ஸின் ஓட்டத்துக்கு மேலே ஓடும் மனோவேகம்... குழந்தை ஆதர்ஷை ஆக்கிரமித்திருந்தான். குழந்தை ஏதோ வகையிலான சிறைப்படுத்தப்பட்ட, பாதுகாப்பற்ற நிலையில் இருக்கிறான்... ஒரு சதுரப் பெட்டிக்குள் திணிக்கப்பட்டது போல..

அவனைத் தன்னுடன் வைத்துக் கொள்ளலாம்... தான் இருக்கும் ஊரில் வீட்டிற்குப் பக்கத்தில் பள்ளிகளும் உண்டு. கான்வென்ட்கள்தான். புஷ்பத்தைப் போலப் பையனைக் கொண்டு விட்டு அழைத்து வரலாம்... வாகனங்கள் ஓடும் ஊர்தான் என்றாலும் இவ்வளவு நெரிசல் இல்லை. குறிப்பாக இரண்டுங்கெட்டான்கள் கையில் வாகனங்கள் கிடையாது. பயலின் பாட்டிக்குக் கூட இதில் விருப்பமே. அவனுக்கு ஏகப்பட்ட நேரம் மீந்து கிடக்கிறது. அவன் சின்ன வயதில் கேட்ட குரங்கு அப்பம் பங்கிட்ட கதையிலிருந்து, குருவி பாயசம் வைத்த கதை வரை, பிறருக்குச் சொல்லப் படாமல் அவனுக்குள்ளேயே துருப்பிடித்துக் கிடக்கின்றன.

பையனின் பெற்றோர் ஏனோ ஒப்பவில்லை. அவர்கள் பார்வையில் பையன் துஷ்டன். சமாளிப்பது வெகு சிரமம். கண்டிப்பு இல்லையேல் அவ்வளவும் நாசம். தாத்தா பாட்டிக்கு செல்லம் கொடுக்கும் குணம்... வயதான காலத்தில் அவர்களுக்கு வீண் சுமை கூடாது.



பெரியவர்களிடம் ஒருவிதமான போலி உணர்ச்சி வந்து விடுகிறது. மரியாதை என்று அதற்குப் பெயரும் உண்டு. பையன் கண்ணாடியைப் போல... கோபமானாலும், மகிழ்ச்சியானாலும் அப்படியே காண்பித்து விடுகிறான்... அவன் காட்டும் எந்த உணர்ச்சியும் முடிவில் தனக்கு பிரமிப்பையும் வியப்பு தடவிய சந்தோஷத்தையும் மட்டுமே தருகின்றன. இதில் ஈகோ வருவதில்லை. குற்ற உணர்ச்சி இல்லை.

என்ன செய்கிறானோ... ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

"என்ன மாமா... இந்தத் தடவை ரொம்ப நாள் அஞ்சாத வாசம்..." மாப்பிள்ளை கண்ணைச் சிமிட்டிக் கொண்டு கேட்டார்.

வாஸ்தவம்தான்... அவனுக்கு உடம்பு, பென்ஷனர்கள் கூட்டம். தனியாகச் செய்து கொண்ட கேட்ராக்ட். (இவர்களுக்குச் சொல்லவில்லை, வேலை வெட்டியை விட்டு விட்டு இவர்கள் வருவதால் பயனில்லை.)

"எங்க... மாஸ்டரைக் காணும்..." கண் துழாவியது. லென்ஸ் வைத்து தைத்ததில் பளிச்சென்று பார்வை.. அஸ்தமிக்கும் என்னும் பயம் வேண்டாம். நெற்றியில் கைவைத்துக் கண்கூசலைத் தடுக்க வேண்டாம்.

பையன் வந்தான்... ஒரு துள்ளல் இல்லை. பாய்ச்சல் இல்லை. நடுவில் இடைவெளி

# நம்புகிறீர்களா 100% மிச்சம்

நீங்கள் வாங்கும் 75 ml. சொட்டுநீலத்தின் விலை ரூ. 5.25. ஆனால் ரூ. 2.50 விலையிலே ஒரு நொடியில் ஒரு பாட்டில் சொட்டு நீலம் தயார் செய்து கொள்ளலாம்.

**BBL**

**தமிழ்நாட்டில்**
**முதன் முறையாக அறிமுகம்!**




BBL "லில்லி" விஞ்ஞான நீலக்கலவை பவுடர் O.W.+ ஃபார்முலா அடங்கிய ஒரு பேக்கட்டை வாங்கி 75 ml. அல்லது 100 ml. தண்ணீரை ஏதாவது ஒரு காலிபாட்டிலில் ஊற்றி "லில்லி" பவுடரை அதில் கொட்டி நன்றாக குலுக்கவும். இப்பொழுது ஒரு நொடியில் அதிக வெண்மை தரக்கூடிய சொட்டு நீலம் தயார்.

- வெள்ளை துணிகளின் அபார வெண்மைக்கு "லில்லி", துணிகளில் சீராகப் பரவும்.
- ஒரு லிட்டருக்கு 2 சொட்டுகள் போதுமானது.
- வெய்யிலிலோ அல்லது நிழலிலோ எப்படி வேண்டுமானாலும் காய வைக்கலாம்.
- வேறு சொட்டு நீலங்களை விட 100% அதிக வெண்மை தரக்கூடியது- "லில்லி".











75 ml. ஒரு பாட்டில் தயார் செய்யும் 5 கிராம் BBL லில்லி ப்ளூ ஒரு பேக்கட் - ரூ. 2.50
250 ml. ஒரு பாட்டில் தயார் செய்யும் 15 கிராம் BBL லில்லி ப்ளூ ஒரு பேக்கட் - ரூ. 7.00

*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*

**South Zone Marketing Office :**
The Marketing Manager
**Bombay Blue Laboratory (Pvt.) Ltd.**
21, Venkatachalam Road, R. S. Puram, Coimbatore - 641 002. Phone : 445016, 445019.

HARMONY/265/96

## அருள்வாக்கு:
## கல்விச் சிந்தனை

பையன் வீட்டிலேயே ட்யூஷன் கற்றுக் கொண்டால் பையன் யஜமான், வாத்தியார் சேவகன் என்றே அர்த்தம். ஹாஸ்டலிலும் காலேஜிலும் கூடத் 'தான் யஜமான்' என்பதால்தான் ஸ்டிரைக் பண்ணுகிறான். வார்டனையும் ப்ரொபஸரையும் அடிக்கப் போகிறான். ஏனென்றால் இங்கெல்லாமும் முதலில் பையனிடம் கையை நீட்டிப் பணத்தை வாங்கிக் கொண்டு விடுகிறார்கள். குருகுலத்திலோ கடைசியாகத்தான் தக்ஷிணை. இம்மாதிரி விஷயங்களில் நம் பூர்விகர்களின் ஸைகாலஜி - நுட்பம் ஆச்சரியமாயிருக்கிறது! பல வருஷம் அவரோடு சேர்ந்து அன்பாகப் பழகினபின் சிஷ்யனுக்கே ''எதைத் தருவோம், எதைத்தான் தரக் கூடாது?'' என்று நன்றியும் ஆர்வமுமாக இருக்கும்.



இம்மாதிரி சந்தர்ப்பத்தில் ''இந்திராணியின் குண்டலத்தைக் கொண்டு வா'' ''நாகரத்தினத்தைக் கொண்டு வா'' என்று கேட்ட குருமாரும் உண்டு. ஆனால் இப்படிக் கேட்டவர்கள் அபூர்வமே. சிஷ்யனால் இம்மாதிரி அஸாத்யத்தையும் சாதிக்க முடிகிறது என்று காட்டி அவனைப் பெருமைப்படுத்தவே இவர்கள் இப்படிக் கேட்பார்கள். பொதுவில் எந்த குருவும் துராசை பிடித்து எதுவும் கேட்கமாட்டார். அல்ப ஸந்தோஷியாக எதிலும் திருப்திப்பட்டு விடுவார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

விட்ட கிழவன் மேல் கோபமா... சாரி மைடியர்.

பையன் நட்பு குன்றாமல்தான் இருந்தான். கை கால் கழுத்து எலும்புகள் குச்சியாக நீண்டிருந்தன. இளைப்பா, உயர்ந்திருக்கிறானா...

"என்னடா கண்ணு... பார்க் அழச்சிட்டுப் போறியா தாத்தாவை..."

இணைந்த கரத்தில் மிருது சற்று மட்டமாகவே இருந்தது. இவன் பெரிய பையனா, வளர்ந்த குழந்தையா... எனக்கு எப்போதும் குழந்தைதான்.

இம்முறை பையன் விளையாடவில்லை... வயோதிகர்கள் அமரும் பெஞ்சில் அமர்ந்து தாத்தாவிற்கும் இடம்கொடுத்தான். பேச்சும் பள்ளி படிப்பு, பார்த்த திரைப்படம், பாட்டி அனுப்பிய வாழ்த்து என்று எல்லா' நிலைகளிலும் இருந்தது. அவன் முற்றிலும் விலகாமல் விலகி விட்டானோ...

இரவுச் சாப்பாட்டு மேஜை...

"மிஸ்டர் ஜெர்ரி ரொம்ப ஒடிஞ்சு போயிட்டார். ஒரே புலம்பல்... ரெண்டு நாளுதான் இல்லை... அது தெரிஞ்சு யாரோ வீட்டுக்குள்ள நொழைஞ்சு... ச்ச்... நெனைக்கவே முடியலே... ஒரே ரத்தமாம். அந்த லேடி ரொம்ப நல்லடைப்..." மகள் முகம், சொல்லும் போது இரக்கத்துடன் சோகத்தையும் காட்டியது.

"இப்பல்லாம் தனியா இருக்கற ஃப்ளாட்ல இது ஜாஸ்தியாயிட்டு வருது. மூணாம் வருஷம் ஜெமினிகிட்ட ஒரு லேடி..."

உரையாடல், நாடு ஒழுங்கீனத்தின் எந்தப் படியில் என்றவரை போய் முடியாமல் முடிந்து போனது.

யாரும் எழுப்பாமல் பையன் எழுந்தான். மௌனமாக இயங்கினான். அவனே குளித்து, உடைமாட்டி, அலங்கரித்து, உணவு உண்டு... அட்டவணை போல...

"ஸ்கூலுக்கு அப்பாதான் விடறாரு... இன்னிக்கு நா வரட்டுமா..."

"வேணாம் தாத்தா... பஸ் வந்துடும். நீங்க இன்னிக்கா ஊருக்குப் போறீங்க?"

"இல்லப்பா... ரெண்டு நாள் இருப்பேன்... நீ ஸ்கூல் போய் வா... ஐ வில் வெய்ட் ஃபார்யூ..."

"ஊருக்குப் போவலியா... அப்படின்னா ஒண்ணு சொல்றேன் தாத்தா... நாங்க யாரும் இருக்க மாட்டோம். நீங்க தனியா இருப்பீங்க. யார் பெல் அடிச்சாலும் இந்த ஓட்டை வழியா பாத்துட்டு அப்புறம் திறங்க. பீ கேர்ஃபுல். பை" கையை ஆட்டி விட்டு இறங்கியவன் போவதையே கவலையுடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

## கவிதை

# ஊர் திருவிழாக்கள்



இன்னும்
கொஞ்சம் நாளில்
எங்கள் ஊர் சுவரெல்லாம்
கலர்... கலராய்
சொக்காய் மாட்டிக்கொள்ளும்.

வித்தியாசமாய்
மரங்களில்
கொடிகள் மட்டுமே பூக்கும்.

ஏதோ
நாளையே நாடு மாறிவிடுமளவுக்கு
கொள்கைகள்
காற்றில் பறந்து வரும்.

ஊர்க்காத்தான்
திருவிழாவைப் போல்
சகலமானவர்களுக்கும்
இதன் மேல் ஒரு 'இது'.

எல்லாம் முடிந்த பிறகு
விழா நடந்த
கோயில் பிரதேசமாய்
எங்கள் ஊர்.

ஜனங்களின் விரல்களில்
வெறும்
கரும்புள்ளி மட்டுமே
மிஞ்சும்.

மீண்டும்
நாங்கள்
அன்றைய
மார்க்கெட் நிலவரப்படி
அடமானம்
வைக்கப்பட்டிருப்போம்.

– புதுவை இளவேனில்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் :
வி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு
அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# மாற்றமில்லாத கொள்கைகள்
# 1946 முதல்




50 ஆண்டு திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவைக் கொண்டாட்டம்

## பிக்செட் டெபாசிட்டுகளை வரவேற்கிறது

### பிக்செட் டெபாசிட் திட்டங்கள்

| காலம் மாதங்களில் | ஆண்டுக்கு வட்டி விகிதம் | |
|---|---|---|
| | மாதாந்திரம் | காலாண்டு (மாதந்தோறும் கூட்டு வட்டியாக) |
| 12 மாதங்கள் & 1 நாள்<br>25 மாதங்கள்<br>36 மாதங்கள்<br>48 மாதங்கள்<br>60 மாதங்கள் | 15% | 15.19% |

* குறைந்தபட்ச டெபாசிட் ரூ. 1000/- பின், அதன் மடங்குகளில்.
** ரூ. 16,000 வரையிலுள்ள டெபாசிட்டுகளுக்கு இங்கு வரிக்கழிப்பு இல்லை.

### குமுலேட்டிவ் டெபாசிட் திட்டங்கள்

| காலம் மாதங்களில் | ரூ. 1000 டெபாசிட்டுக்கு முதிர்வடையும் போது தரப்படும் தொகை | ஆண்டு வருவாய் (மாதந்தோறும் கூட்டு வட்டியாக) | கீழ்கண்ட டெபாசிட்டுகள் வரை வரிக் கழிப்பு இல்லை |
|---|---|---|---|
| 12 மாதங்கள் & 1 நாள் | ரூ. 1161 | 16.10% | ரூ. 15000 |
| 25 மாதங்கள் | ரூ. 1364 | 17.47% | ரூ. 13000 |
| 36 மாதங்கள் | ரூ. 1564 | 18.80% | ரூ. 11000 |
| 48 மாதங்கள் | ரூ. 1815 | 20.38% | ரூ. 10000 |
| 60 மாதங்கள் | ரூ. 2107 | 22.14% | ரூ. 8000 |

* குறைந்தபட்ச டெபாசிட் ரூ. 1000/- பின், அதன் மடங்குகளில்.

### ரெக்கரிங் டெபாசிட் திட்டங்கள்
(குறைந்தபட்ச தொகை ரூ. 500)

| காலம் மாதங்களில் | ஆண்டு ஒன்றுக்கு வட்டி | முதிர்வடையும் போது மதிப்பு (ரூ. 500-க்கு) | கூடுதலான ஒவ்வொரு ரூ. 100-க்கும் |
|---|---|---|---|
| 12 மாதங்கள் & 1 நாள் | 14% | ரூ. 6477 | ரூ. 1295 |
| 25 மாதங்கள் | 15% | ரூ. 14749 | ரூ. 2949 |
| 36 மாதங்கள் | 15% | ரூ. 22840 | ரூ. 4568 |




**தி இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா லிட்**
ஒரு H.C. கோத்தாரி குரூப் நிறுவனம்

மஷ்கூர் பில்டிங்ஸ், 1 கிருஷ்ணமாச்சாரி சாலை, நுங்கம்பாக்கம் சென்னை 600 034
தொ. பே 827 6297, 827 4871, 823 3202

For statutory details, refer to our advertisement in The Hindu dated 7.9.95

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka